உ

சிவமயம்

யாழ்ப்பாணம் இணுவில்

கலாரட்ணா, கலாபூஷணம், கவிமாமணி, மஹாவித்துவான்

பிரம்மஸ்ரீ மா.த.ந.வீரமணி ஐயர் M.A.J.P.

அவர்களின்

# விநாயகர் வேலவர் கீர்த்தனைகள்



வெளியீடு :
வீரகிருஷ்ண வெளியீட்டகம்,
இணுவில் தெற்கு,
இணுவில்.
சுன்னாகம்.

T.P: 021 222 3924

உ

சிவமயம்





# விநாயக, வேலவர் கீர்த்தனைகள்


இயற்றியவர்

"இயலிசைவாரிதி" "அருட்கலைவாரிதி" "கவிமாமணி"
"ஸாகித்ய ஸாகரம்" "கலாரத்னா" "கலாபூஷணம்"
மகாவித்துவான்

யாழ்ப்பாணம் - இணுவில்

**பிரம்மஸ்ரீ மா.த.ந. வீரமணிஐயர் M.A. அவர்கள்**

(அகில இலங்கை சமாதான நீதிபதி)





வெளியீடு:
வீரகிருஷ்ண வெளியீட்டகம்
இணுவில் தெற்கு,
இணுவில்.
சுன்னாகம்.
☎ 222-3924

## பொருளடக்கம்

# விநாயக, வேலவர் கீர்த்தனைகள்

# ஆசிச் செய்தி

அன்புள்ளவர்களுக்கு ,

மஹாவித்துவான் பிரம்மஸ்ரீ மா.த.ந. வீரமணிஐயர் அவர்களால் விநாயகப் பெருமானின் மீதும் பாடப்பெற்ற விநாயகர் கீர்த்தனைகளும், முருகப்பெருமான் மீதும் பாடப்பெற்ற முருகன் கீர்த்தனைகள் மலராக வெளிவருவதனையிட்டு பெருமகிழ்ச்சியடைகின்றோம்.

கலியுகவரதனாகிய கந்தப்பெருமான்மீது கவிபாடி வரம் பெற்றோர் பலராவர் அவ்வகையில் மஹாவித்துவான் அவர்களும் இனிய வசந்தமிழால் கந்தனவன் பெரும்புகழை அழகாகப் பாடியுள்ளார். இறவாப்புகழ் பெற்ற இவருடைய பாடல்கள் இனிய நயங்கொண்டவையாகவும் இறைவனை தம்வசப்படுத்தக் கூடியனவாகவும் அமைந்துள்ளன.

இவருடைய பாடல்களை நாமும் பாடி விநாயகனின் கந்தனின் கருணையினைப் பெற்று மண்ணில் நல்லவண்ணம் வாழ்வோமா. இவருடைய பாடல்களினை அச்சுவாகனம் ஏற்றி நூலாக்கம் செய்கின்ற சிரிய பணியினை செவ்வனே ஆற்றி வருகின்ற திருமதி. வீரமணிஐயர் அவர்களுக்கும் ஏனையவர்களுக்கும் இறைவனுடைய ஆசி கிடைக்கப் பிரார்த்திக்கின்றோம்.

''என்றும் வேண்டும் இன்ப அன்பு''
இரண்டாவது குருமஹாசந்நிதானம்,
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக
ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்

Raghu Krishnamoorthy
27 Berkeley court
Marylebone Road,
London NW 15 NA.

MARCH 2004

To Whom it May Concern :

Dear / Sir or Madam

We are delighted to be given opportunity of making a small contribution to the publicalion of the invaluable works of late Shri Yalpanam Veeramani Iyer. His conributions to the divine art of carnatic music and dance is unparalleled in recent times and I Congratulate you on bringing on his works to the world.

Our family has never had the privilege of meeting Shri Veeramani Iyer His art lives through from his shishyas our daughter preetha Raghu has the honour learning from one of his premier Disciples, guru Srnt Sivasathi Sivanesan, Bharathya, Vidya Bhavani, London Mrs Sivanesan and from the function. We attened in December in memorium of shri Iyer. We learnt about the great soul and his work.

True gurus are eternal ever cresent is their works that will never die they provide inspiration for generations to come. We realize that Shri Veeramani Iyer lives in his disciple Srnt. Sivanesan and in turn he lives in many of her disciples.

As, you seek to bring out the many Splendid Works of Shri Iyer, We are truly honoured to join your attempts to make his works immortal. We are sure that they will find expresslon for many centuries to come through the great guru shishya parampara.

Thank you .

Raghu krishnamoorthy, Bala Raghu, Preetha Raghu and maya Raghu.

உ

சிவமயம்

# விநாயகர் அந்தாதிக் கீர்த்தனைகள்


இயற்றியவர்

"இயலிசைவாரிதி"

மஹாவித்துவான்

யாழ் - இணுவில்

**பிரம்மஸ்ரீ மா.த.ந. வீரமணிஐயர்**

**அவர்கள்**

# இணுவில்

# ஸ்ரீ பரராஜசேகரப்பிள்ளையார் கீர்த்தனை

கன்னல் தமிழ் இணுவையூர்க் கவின் கோபுரக் கோவில் மன்

இராகம் - திலங் தாளம் - ஆதி

பல்லவி

உன்னை விட்டு நான் பிரிந்து ஓராயிரம் கல் வந்தாலும்
சந்நிதி வாசலில் மனம் சரணடையுதே கணேசா!

அநுபல்லவி

கன்னல் தமிழ் இணுவையூர் கவின் கோபுரக் கோயில்
மன்னவனே பரராஜ மாதங்கவி நாயகனே

சரணம்

சித்தி புத்திநாயகனே!
சிற்பரனே கற்பகமே!
பக்தியால் பணிந்தேன் உன்னைப்
பரராஜ சேகரனே!
அத்திமுகத் தண்ணலே நின்
அடிமலர்ச் சேவடியில்
நித்தமும் என் நெஞ்சம் வீழ்ந்து
நெஞ்சம் துதிக்குதையா

☆☆☆☆

மானிப்பாய் மருதடி துணை

# மானிப்பாய் மருதடி விநாயகர் அந்தாதிக் கீர்த்தனைகள்

## 1. திருவடி சரணமையா

**இராகம்: நாட்டை** **தாளம்: ஆதி**

பல்லவி

திருவடி சரணமையா - துதிக்கையா
மருதடியில் அமரும் மதக்கரியே உந்தன்

அநுபல்லவி

குருவடிவாகிய குஞ்சரனே அருள்வாய்
பெருவடிவே எனக் கொரு துணையாய் மலரும்

சரணம்

தாமரைத்தாள் மலர்ப்பாதம் சிலம் பொலிக்க
பாமலர் பாடிட பரிந்து வரும் அழகா!
தேமதுரத் தமிழில் மானிநகர் வாசா!
நாமமகிமை பாட நல்லருள் செய்தருள் (திருவடி)

## 2. நல்லருள் செய்தருள்

**இராகம்: ஹம்ஸத்வனி** **தாளம்: ஆதி**

பல்லவி

நல்லருள் செய்தருள் வல்லமை நாயகா!
அல்லல் அகற்றிடும் ஆனைமுகனே என்றும்

அநுபல்லவி

வல்லரக்கர் அகந்தை வதைத்திடும் வாரணனே
தொல்லை யகற்றிடுவாய் தொந்தி விநாயகனே

சரணம்

தேனின் மலர்ச் சோலை திகழ்ந்து மணம் கமழும்
மானிநகர் மருதடித்தல மமர்ந்தோய்!
ஊனினை உருக்கியே உள்ளொளி பெருக்கியே
தண்ணருள் தருமலர் தாமரைப் பதந்தந்தே! (நல்லருள்)

## 3. ஆனைமுகனே உந்தன்

இராகம்: பேகட                                   தாளம்: ஆதி

பல்லவி

ஆனைமுகனே உந்தன் அடியிணைமலர் தொழுதேன்
மோனைத் தமிழ் நுகரும் மூஷிக வாஹனனே

அநுபல்லவி

தேனைப் பொழியுமலர் செந்தாமரை சூழும்
மானிநகர் பதியின் மருதடித்தலம் வளர்

சரணம்

மோதகம் அவலும் பாயாசமும் பருப்பும்
காதலுடனே வைத்து கழலடி போற்றினேன்
ஆதாரம் இல்லை ஐயா அபயம் தரும் தேவா
பூதல மீதில்உந்தன் பூங்கழல் தனைநாடி (ஆனை)

## 4. மோதகப் பிரியனே

இராகம்: ஆரபி                                   தாளம்: ஆதி

பல்லவி

மோதகப் பிரியனே மூஷிவாகனனே
பாதமலர் தாராய் பசுபதியின் மகனே

அநுபல்லவி

காதலுடன் நானும் கதலிப்பழம் பருப்பும்
பாலுடன் தேனமுதம் படைத்து பூசை செய்தேன்

சரணம்

இயல்தமிழ் பருப்போடு
இசைத் தமிழ் தேன் சேர்த்து
நயம்நிறை நாடகமாம்
நற்றமிழ் அவல் செய்து
பயபக்தியோடு அன்பாய்
படைத்தேனுன் மலர்ப்பதம்
தயவுடன் ஏற்றருள்வாய்
தாமோதரன் மருகா.                    (மோதகப்)

## 5. உந்தனைப் போலவந்து

**இராகம்: பெஹாக்** **தாளம்: ஆதி**

பல்லவி

உந்தனைப் போலவந்து எந்தனைஅணைக்கும் தெய்வம்
உலகந்தனில் உண்டோ? - கணபதியே!

அநுபல்லவி

பந்தமுடன் உன்னை பாடித்து தித்தபோது
எந்தனை ரக்ஷிக்க வந்தனை தந்திமுகா

சரணம்

செந்தமிழ் செழித்திடும் செந்தாமரை மலரும்
பைந்தமிழ் மானிநகர் பரிந்துறையும் தேவா!
வந்தணைந்தே திருமருதடியில் அமரும்
தந்திமுகத் தோனே தாள் சரணம்நாதா (உந்தனைப்)

## 6. மாமதக்கரிமுகா

**இராகம்: தோடி** **தாளம்: ஆதி**

பல்லவி

மாமதக்கரிமுகா மகிழ்ந்தருள்வாய்
தாமத மில்லாமல் தயை புரிவாய் தேவா

அநுபல்லவி

தேமலர்ப் பொழில் சூழும் மானியம் பதிமேவும்
மாமருதடி வளர் வாரணனே சரணம்

சரணம்

தந்திமுகவா உந்தன் தாளிணை சரணம்
எந்தனைக் காத்திட எழுந்தோடி வாராய்
அந்திப் பிறைபோல தந்தஅழ குடையோய்!
வந்தெனக் கருள்தரத் தொந்தி யசையவாராய் (மாமதக்)

## 7. தொந்தியசைந்திட

**இராகம்: காபி** **தாளம்: ஆதி**

பல்லவி

தொந்தியசைந் திடத் துள்ளி ஓடிவாராய்!
தந்திமுகா உந்தன் தன்னருள் தாராய்!

அநுபல்லவி

செந்தமிழ் ஓங்கிடும் செழு மானிநகர் மேவும்
முந்தி மருதடியில் மூஷிகமேறும் தேவா!

சரணம்

விந்தையாய் முன்னம் நீயும் விளங்கிடும் பாரத்தை
தந்தமெடுத் தேந்தி தும்பிக்கையால் வடித்தாய்!
சிந்தைக் கினியவனே சிந்தூரக் கற்பகமே!
தந்திடுவாய் உந்தன் தாமரை மலர்பாதம் (தொந்திய)

## 8. தும்பிக்கை துணையென

**இராகம்: பைரவி** **தாளம்: ஆதி**

பல்லவி

தும்பிக்கை துணையென நம்பிக்கை கொண்டேன்
தம்பிக்கு வந்தருள் தந்த கணபதியுன்

அநுபல்லவி

அம்பிகை பாலனே ஆனைமுகனே உன்னைக்
கும்பிட்டனுதினமும் குரைகழல் இறைஞ்சினேன்

சரணம்

குஞ்சரனே வாராய் ஐந்துகரனே அபயம்
செஞ்சரண மலரோம் சேவடிகள் தருவாய்
கஞ்சமலர் பொலியும் கழனி சூழும் மானி
மஞ்சு தவழ் கோபுர மருதடியில் வளரும் (தும்பிக்கை)

## 9. பக்தி பண்ணி உனதருள்

**இராகம்: சுருட்டி** **தாளம்: ஆதி**

பல்லவி

பக்தி பண்ணிஉனதருள் பாதம் தொழுதேன் ஐயா!
சித்தி விநாயகனே சேவடி தாராயோ?

அநுபல்லவி

சித்திரத் தேரின்மீது சிங்காரப் பவனிவரும்
சித்திக் கணபதியே செழும் மானிநகரினில்

சரணம்

பைரவி பாலகனே பரமனின் மகனே
பைந்தமிழ் பாடிநான் உந்தனையே புகழ்வேன்
வைர முடியிலங்க வந்தெனக் கருள்தாய்
வையகத்தில் மருதடி வாரணனே பூரணனே (பக்தி)

## 10. செந்நெல் கழனி சூழும்

**இராகம்: திலங்** **தாளம்: ஆதி**

பல்லவி

செந்நெல் கழனி சூழும்
செழும் பதி மானிநகர் வளரும்
மன்னும் தல மருதடி மாதங்கனே சரணம்

அநுபல்லவி

கன்னல் கனி ரசமும் கதலி பழமும் பருப்பும்
நன்னலச் செந்தமிழும் நானுனக்கு படைத்தேன்

சரணம்

சந்தமும் உன்னை சரணடைந்தேன் நானும்
செந்தமிழ் பாடியே சேவடிகள் துதித்தேன்
தந்தி முகனே வந்து தண்ணருள் தாராயோ?
சுந்தரி பாலகனே கந்துகக் கணிபதியே (செந்நெல்)

முறிகண்டி விநாயகர் துணை

# முறிகண்டி விநாயகர் அந்தாதிக் கீர்த்தனைகள்

## 1. ஆனந்த மூர்த்தி

இராகம் : கம்பீரநாட்டை தாளம் : ஆதி

பல்லவி

கானகந்தனில் வாழும் கணபதியே - அருள்வாய்
மோனக்கவினழகில் மோகம் கொண்டேன் தேவா

அநுபல்லவி

ஆனினங்கள்சூழும் பால்மணம் தான்கமழும்
தேனருவிபாயும் தெய்வமுறிகண்டிக்

சரணம்

தெருவோரம் வீற்றிருந்து தேடிவருபவர்க்கு
அருளாரும் கரம்கொண்டு அபயம் தரும்நாதா
பெருமானே பேரருளா கரியானை மாமுகனே
அருமாமறைகள் போற்றும் ஆனந்த மூர்த்தியே.

## 2. சண்முகன் சோதரா

இராகம் : ஷண்முகப்ரியா தாளம் : ஆதி

பல்லவி

சண்முகன் சோதரா என்முகம் பாராய்
பண்முறை பாடிநான் பரவிட வாராய்

அநுபல்லவி

கண்மலரின் கருணைக் காந்தம் எனை இழுக்கும்
தண்மலர் சேவடிகள் தந்து எனக்கருளும்

சரணம்

மனமொழி மெய்கொண்டு மலரடி தொழுதேன்
நினதடியே வாழ்வில் நெஞ்சாரவே பணிந்தேன்
வனமது சூழ்ந்திடும் வளமுறிகண்டித்
தலமதிலுறைவோய் தாளே சரணம்.

## 3. அத்திமுகத் தேவா

இராகம் : நாட்டைக்குறிஞ்சி தாளம் : ஆதி

பல்லவி

அத்திமுகத் தேவா அபயமருள்
நித்தியமும் உன்னை நெஞ்சாரப் பணிந்திட

அநுபல்லவி

பக்தியுடன் அன்பும் பாமாலை பாடியுந்தன்
நற்றிருமலரடி நான்சூட்டிப் போற்றிட

சரணம்

மரங்கள் மிகசெழித்து மாங்கனிகள் குலுங்கும்
பரந்தன் முறிகண்டி பாலித்திடும் தேவா!
அரங்கன் மருகனே ஆனைமுகா சரணம்
குரங்குகள் தாவும் வனமடர்ந்த கோயில் கொண்ட

## 4. பால்மணம் மாறாத

இராகம் : பேகட தாளம் : ஆதி

பல்லவி

பால்மணம் மாறாத பச்சைக்குழந்தையினைப்
போல்உனை நான்கண்டு பூரித்து நின்றேனையா

அநுபல்லவி

வேல் எடுத்த முருகன் வேடர் குலமகளாம்
சேல்நயன வள்ளியை சேரஅருள் செய்தார்

சரணம்

முற்றிலடர்ந்த கான முறிகண்டித் தலமதில்
வெற்றியுடனிருந்து விரும்பியருள் செய்வாய்
பொற்றிரு மலரடி போற்றினேனே கணேசா
நற்றிருவருள் தாராய் நாடினேனே தேவா.

## 5. மூலகாரணா மூஷிகவாஹனா

**இராகம் : ரேவதி** **தாளம் : ஆதி**

பல்லவி

மூலகாரணா மூஷிகவாஹனா
காலகாலனே கணபதியேயருள்

அநுபல்லவி

நீலமேகனே நித்திய பூரணா
சீலமேயருள்வாய் சித்தி விநாயகனே

சரணம்

தோகை மயில்களாடும் தெய்வமுறி கண்டியில்
வாகை மரத்தடியில் வாரணா வீற்றிருந்து
ஏழை எனக்கருள்வாய் எங்கும் நிறைந்தவனே
பேழை வயிற்றுடைய பிள்ளையாரே வேத

## 6. நீயே துணை நிர்மலனே

**இராகம் : ரீதிகௌள** **தாளம் : ஆதி**

பல்லவி

நீயே துணை நிர்மலனே - கஜமுகா
சேயேன் செகமதில் ஜெயம் பெறவாழ்வில்

அநுபல்லவி

நேயமுடன் உந்தன் நீழலை நாடினேன்
ஆயகலையின் முதல் ஞானத்தமிழ் பாடினேன்

சரணம்

கந்தனின் சோதரா கணபதி தேவனே
உந்தனிரு பாதம் தந்தருள் நாதனே
முந்திடுவாரணா முறிகண்டித் தலமமர்
தொந்திவிநாயகா துதிக்கையனே சரணம்

## 7. வனமமரும் வாரணனே!

**இராகம் : மத்யமாவதி** **தாளம் : க. சாபு**

பல்லவி

வனமமரும் வாரணனே
வரமருள்பரி பூரணனே

அநுபல்லவி

தினமுனதடி தொழுதேனே
திருவடிபெற அழுதேனே

சரணம்

ஐங்கரனே இரங்காயோ
மங்களரூப மாமுகனே
பங்கஜபத மலர்தாராய்
பதிமுறிகண்டி தலமிளிரும்

ஸ்ரீசித்தி விநாயகர் துணை

# டென்மார்க் ஹேர்ணிங் ஸ்ரீ சித்திவிநாயகர் பக்திரஸக் கீர்த்தனைகள்

## 1. திருவருள் பொழிவான்

**இராகம் : ஷண்முகப்ரிய** **தாளம் : ஆதி**

பல்லவி

திருவருள் பொழிவான் தும்பிமுகன் என்றும்
திருவடி போற்றியே தினம் தொழுவாய் மனமே

அநுபல்லவி

மருவிடும் நகர் டென்மார்க்
மண்ணிடு ஹேர்ணிங் தலம்
திருக்கோயில் கொண்டருளும்
சித்திவி நாயகன்

சரணம்

வாசலில் வந்து நின்றே
வாரணா கதி நீயென
பூசனை புரிந்தென்றும்
பூம்பதம் நீ துதிப்பாய்
நேசமுடன் உன்னை
நித்தியம் காத்தருள்வான்
பாசமும் சங்குமேந்தும்
பரன் சித்தி விநாயகா.

## 2. ஓடோடி வந்தேனையா விநாயகா

**இராகம் : ஸிம்மேந்தர் மத்யமம்** **தாளம் : ஆதி**

பல்லவி

ஓடோடி வந்தேனையா - விநாயகா
மாடோடிச் சிவனவன்
மைந்தனே உன்னிடம்

அநுபல்லவி

காடோடிக் கடலோடி
கானவழி ஓடி
நாடோடி வந்தெனக்கு
நற்கதி அருள்வாயென

சரணம்

நின்னையேன்றி வேறு
நிலத்தில் துணையுமுண்டோ
வண்ண மருப்பழகா
வாரணா தஞ்சமையா!
நன்னகர் டென்மார்க்கில்
நற்றலஹேர்ணிங் வாகா
என்னைக் கண்பாராயோ?
எழிலருள் தாராயோ

## 3. தேனின் இனிக்கப் பாடுவாய்

**இராகம் : மோகனம்** **தாளம் : அதி**

பல்லவி

தேனின் இனிக்கப் பாடுவாய் - மனமே
மோனைத் தமிழில் நீயும்
ஆனைமுகன் புகழை

அநுபல்லவி

வானையளாவும் மாட
மாளிகை சூழ் டென்மார்க்ஹேர்ணின்
கோனை ஒற்றைக் கொம்பனை
கோலச் சித்தி விநாயகனை

## சரணம்

முத்தமிழும் தருவான்
மோகனமும் தருவான்
எத்திசை ஏத்தும் கல்வி
எழிற்கலைகள் அருள்வான்
சித்தமதில் சாந்தம்
செம்மையுறத் தருவாய்
சித்திவி நாயகனைச்
செந்தமிழில் பக்தியடன்

## கண்ணிகள்

1. எங்களைக் காக்க மங்கள மூர்த்தி
ஐங்கரன் டென்மார்க் வந்தமர்ந்தான்
சங்கடங்கள்நீக்கி சாந்தமும் அருளிட
பொங்கிடு டென்மார் ஹேர்ணில் கோயில்கொண்டாள்

2. நித்தமும் அவனை நெஞ்சாரத் தொழுவோம்
சித்தி விநாயகன் அருள்தருவான்
பக்தியுடன் தொழ பரிந்தன்புடன் அவன்
சித்தி நிறைஅருள் பொழிந்திடுவான்

3. டென்மார்க் ஹேர்ணிங் திருக்கோயில் வந்தே
அன்பாய் விநாயகன் அடிபணிவோம்
துன்பம் துடைக்கும் துதிக்கையால் அவனே
இன்பங்கள் யாவுமே தந்திடுவான்

4. கணபதி தானே கதியென்றேத்தி
மணமலர் சூட்டி வணங்கிடுவோம்
குணபதி குஞ்சரன் குறையெல்லாம் தீர்ப்பான்
குரைகழல் தனையே சரணடைவோம்.

## 4. ஷண்முகன் சோதரா

**இராகம் : அமிர்தவர்ஷனி** **தாளம் : ஆதி**

பல்லவி

ஷண்முகன் சோதரா
என்முகம் பாராயோ?
பண்முறை பாடிநான்
பரவிட வாராயோ

அநுபல்லவி

கண்மலரின் கருணைக்
காந்தம் எனை இழுக்கும்
தண்மலர்ச் சேவடிகள்
தந்திடும் அருள்பழுக்கும்

சரணம்

மனமொழிமெய் கொண்டு
மலரடி துதித்தேன்
நினதடியே வாழ்வில்
நெஞ்சாரவே பணிந்தேன்
தனதிகழ் நகர் டென்மார்க்
தலமாக ஹேர்ணிங் அமர்ந்திடும்
கணிபதியே சித்தி
விநாயகனே சரணம்

1. கற்பூர ஜோதிக்குள்ளே - எங்கள்
கணபதி காட்சி தந்தான்
பொற்பூரும் குண்டலங்கள் - அசைய
புன்னகை தான் புரிந்தான்

2. அபயகரம் தூக்கி - கணேசன்
அஞ்சேல் என மொழிந்தான்
உபய பதங்களிலே - நானும்
உருகிச் சரணடைந்தேன்

3. டென்மார்க் ஹேர்ணிங்கோயில் - அமர்ந்து
இன்னருள் சுரந்தானடி
அன்பாலே வென்றான்டி - அந்த
ஆனை முகத்தனடி

4. சித்தி விநாயகனின் - மலரின்
சேவடிகதி என்றே
நித்தம் பிடித்தேனடி - கணேசன்
நிம்மதி தந்தானடி

5. கணபதி இங்கிருக்க - எனக்கு
கவலைகள் இல்லையடி
குணபதி குஞ்சரனின் - அருளால்
குதூகலம் கொண்டுவாழ்வோம்.

## 5. எங்களுக்கு இரங்கிடும் ஏரம்பன்

**இராகம் : பெறாக்** **தாளம் : ஆதி**

பல்லவி

எங்களுக்கிரங்கிடும் ஏரம்பன் - கணேசன்
சிந்தூரக் கற்பகம் சித்தி விநாயகன்

அநுபல்லவி

ஐந்து கரத்தவன் அழகு டென்மார்க் ஹேர்ணிங்
வந்தமர்ந்து கோயில் கொண்ட வாரணன் பூரணன்

சரணம்

ஆயகலைக ளெல்லாம்
அள்ளித்தருவான் அவன்
தூயசெந்தமிழ் பயில
துணையருள் செய்திடுவான்
தோயும் செந்தமிழ் புரிபவன் இசை
தோத்தரித்துப் பாட
நாயகன் சித்திவி
நாயகன் என்றென்றும்

## 6. பக்தியுடன் திரிகரண

**இராகம் : கல்யாணி** **தாளம் : ஆதி**

பல்லவி

பக்தியுடன் திரிகரண சுத்தியுடன் நித்தியமும்
சித்திவிநாயகனைப் பணிமனமே - தெய்வ

அநுபல்லவி

அத்திமுகத்தவன் அருளை அள்ளிப் பொழிவான்
எத்திசையும் போற்றும் டென்மார்க்
ஹேர்ணிங் கோயில் வலம் வந்தே

சரணம்

சூரர்குலம் அழித்த சுபமங்கள நாதன்
சாரமதாம் வேத சாஸ்திரம் போற்றும் தேவன்
தாரணிதனில் டென்மார்க் ஹேர்ணிங் கோயிலுறைபவன்
பாரதக் கதை எழுதும் பாவலன் விநாயகனே.

## 7. பேராநந்தப் பொருளே

**இராகம் : தோடி** **தாளம் : ஆதி**

பல்லவி

பேராநந்தப் பொருளே - பிரணவனே
நாதாநந்த வேதாந்த நளின சிவாநந்தப்

அநுபல்லவி

போதாநந்த அநு பூதியாம் ஓங்கார
ரூபாநந்தனே அருள் பாதாரவிந்தமதே

சரணம்

சத்துசித்தானந்தச் சற்பொருளின் பொருளே
அத்துவிதம் கடந்த ஆனைமுகனே அருளே
சித்திபுத்தி நாதனே சித்தி விநாயகனே
வித்தகர்வாழ் டென்மார்க் விளங்குஹேர்ணிங் நாதா

## 8. நித்தமும் நீ பணிவாய்

இராகம் : ரஞ்சனி　　　　　　　　தாளம் : ஆதி

பல்லவி

நித்தமும் நீ பணிவாய் - மனமே
சித்திவி நாயகன்
சேவடிப் பதமலரை

அநுபல்லவி

சித்தியெல்லாம் தருவான்
சிறந்த அருள்கொடுப்பான்
அத்தி முகத்தவன்
ஆனந்த வாழ்வருள்வான்

சரணம்

கேகல டென்மார்க் ஹேர்ணிங்
கோவில் வலம் வருவாய்
பாலக ணேசன் பதம்
பாடித் தொழுதிடுவாய்
வேலவன் சோதரன்
நாகதம் பிரான் மைந்தன்
நாலு வேதங்கள் போற்றும்
நாதப் பிரணவனை

## ௯. நெஞ்சம் அறியானோ நீ

இராகம் : பாகேஶ்ரீ　　　　　　　　தாளம் : ஆதி

பல்லவி

நெஞ்சம் அறியானோ நீ சொல்லடி - ஸகியே
பஞ்சக்கரன் கணேசன் தஞ்சம் அருள்வானோடி?

அநுபல்லவி

கஞ்சமலர் கரங்கள் கனவிலும், நனவிலும்
அஞ்சலருளுமெனக் குஞ்சரனை நம்பினேன்

சரணம்

ஞானக் கணபதியை
ஞாலமதில் நாடினேன்
மோனவடி வழகன்
மோகத்தில் மூழ்கினேன்
கானப்பிரியன் சித்தி
விநாயகன் என் இதயன்
தேனவர் மலர் டென்மார்க்
ஹேர்ணிங் வாசன் எந்தன்

## 10. நெக்கு நெக்காய்

**இராகம் : ஸிந்துபைரவி** **தாளம் : ஆதி**

பல்லவி

நெக்கு நெக்காய் உருகி நின்பதம் பாடினேன்
திக்கு எவருமில்லை தும்பிமுகா உனை நாடினேன்

அநுபல்லவி

மிக்கபுகழ் ஓங்கும்
மிளிர் டென்மார்க் ஹேர்ணிங்கோவில்
சித்திவி நாயகனே
சேவடி தாராயோ

சரணம்

முப்புரி நூலழகும்
முறுவல் நகையழகும்
அற்புதத் தும்பிமுக
அழகும் எழில் தவழும்
கற்பக வாரணனே
கணேசனே பூரணனே
பொற்பதம் தேடிவந்தேன்
பொலிந்தருள் செய்திடுவாய்.

மூத்த விநாயகர் துணை

# கரணவாய் அருள்மிகு மூத்த விநாயகர் கீர்த்தனைகள்

**இராகம் : ஹம்ஸத்வனி**

(விருத்தம்)

வெவ்வினையை வேரறுக்கும் வேழ மூர்த்தி!
விக்னவி நாயகனே சரணடைந்தோம்
அவ்வை தமிழ் பாடிடவே ஆனந்தக் காட்சி தந்தார்
அழகுதல கருணைப்பதி மூத்தவி நாயகனே.

## 1. கணபதியே துணையே!

**இராகம் : ஹம்ஸத்வனி** **தாளம் : ரூபகம்**

பல்லவி

கணபதி துணையே! - என்றும்
கருணையம்பதி மூத்தவிநாயகக்

அனுபல்லவி

குணபதிசிவக் குஞ்சர னேஅருள்
இணையடி மலர் இகத்தில் தந்தருள்

சரணம்

பாரதம் எழுதிய வாரணன் நீயே!
பார்முதல் ஐம்பூத காரணனும் நீயே
ஏரது இலங்கிடும் ஏடும் துலங்கிடும்
ஊரது கரணவாய் உவந்தமர்பவனே
மாங்கனி வேண்டியே மாதா பிதாவினை
மாதங்கனே வலம் வந்தே பெற்றனை
பூங்கமழ் கரணவாய் புனிதத் தலம்வளர்
பூரணனுன்னையே நாம் சரணடைந்தோம்.

### ஆபேரி – விருத்தம்

நம்பினோம் மூத்தவி நாயகனே
நாடியே வந்தோம் உன் சந்நிதியில்
கும்பிடும் அடியவரின்
குறை தீர்க்கும் குஞ்சரனே
எம்பிரான் சிவன் மகிழும்
ஏரம்பனே கருணைத்
தும்பிமாமுகனே உந்தன்
துதிக்கை தூக்கி ஆளையா.

## 2. துதிக்கை தூக்கி ஆளையா!

**இராகம் : ஆபேரி** **தாளம் : ஆதி**

பல்லவி

துதிக்கை தூக்கி ஆளையா - தும்பிக்கையா
துதிக்கும் எனக்கு உந்தன் தூய பதம் தந்தே

அநுபல்லவி

கதிஉனையன்றி இந்தக் காசினியில் யாருமுண்டோ?
பதிக்கரணவாய் மூத்த விநாயகனே அழகுத்

சரணம்

கணபதி துணை என்றே மறவாத உந்தன் அருள்
திருவடியே தொழுவேன் தீனதயாபரா!
தயைபுரிவாய் ஐயா! தண்ணருள் தாருமையா!
நவநிதியே மூத்த விநாயகனே சுந்தரத்

இராகம் – ஹமீர் கல்யாணி

(விருத்தம்)

மோதகமும் அவலும் அப்பம்
முக்கனியும் கொழுக்கட்டை
ஆவலுடன் நாம் படைத்தோம்
ஆனைமுகா ஏற்றருள்க
பூவலமும் வந்ததென்று
பிதாமாதா வலம் வந்து
மூவுலகக் கருணை பூக்கும்
மூத்தவி நாயகனே சரணம்.

## 3. கருணைபொழியும் முகம் கண்டேன்

**இராகம்: ஹமீர்கல்யாணி** **தாளம்: ஆதி**

பல்லவி

கருணை மழை பொழியும் முகம் கண்டேன்- கணபதியே
கருணையம்பதி மூத்த விநாயகனே உந்தன்

அநுபல்லவி

திருவடி தாராய்குல தெய்வமும் நீயன்றோ?
பெரும் ஆதி சைவக்குரு வேதியர் பூஜித்த தேவா!

சரணம்

கந்தனின் சோதரா கணபதியே வருவாய்
எந்தன் மனத்தில்என்றும் இன்பநடம் புரிவோய்
செந்தமிழ் ஔவைக்கு செழுங்கனி தந்தவனே
பைந்தமிழ்ப் பாடலிலே பரவசமானவனே!

கந்துக மதக்கரியே கணபதி அருள்
சிந்தூரப் பொற்களிறே சேவடிகள் சரணம்
முந்தும் லம்போதரனே மூத்த விநாயகனே
செந்தமிழ்க் கரணவாய் செழுங்கோயில் கொண்டவனே.

இராகம் – நாதநாமக்ரி ய

(விருத்தம்)

கந்தனுக்கு முன்பிறந்த
கணபதி அருள்வாய்
விந்தை நடஞ் செய்யும் மூத்த
விநாயகனே சரணம்
செந்தமிழின் ஈழநாட்டு
செழுந்தலமாம் கருணை வீரர்
கந்தமலர் அருள்பொழியும்,
காலைப்பிடித்தே னையா!

## 4. காலைப்பிடித்தேனையா கணபதியே!

**இராகம்: நாதநாமக்ரியா** **தாளம்: ஆதி**

பல்லவி

காலைப் பிடித்தேனையா - கணபதியே!
வேலைப்பிடித்த வேலன் விரும்பும் சகோதரனே!

அநுபல்லவி

சோலைமணம் கமழும் சுந்தர மலர் குலுங்கும்
கோலத்தலக் கருணை கோயில் கொண்டதேவா

சரணம்

என்றும் உன் சந்நியில் ஏரம்பனே உன்னருள்
எழிற்கோலந்தனைக் காண எமக்கு அருள் செய்வாய்
அன்று அரக்கனையே அழித்த கரிமுகனே
ஆனைமுகனே மூத்த விநாயகனே உந்தன்

பாதாரவிந்தமலர் ஆதாரமென்றே தினம்
நாதாவுன்னையே நாடிநல்லருள் வேண்டினேன்
ஆதிசைவக்குருதுதித்த ஆனந்தக் கணபதியே
மேதினியில் கரணவாய் மூத்தவிநாயகன்உன்

இராகம் – காபி

### விருத்தம்

செஞ்சடையின் முடியாட மதியும் ஆட
செவிகளாட மகரகுண்டலங்களாட
நெஞ்சணிந்த முத்துமணி மாலை ஆட
நீறாட நுதலாடத் திலக மாட
ரஞ்சிதம்சேர் பஞ்சகச்ச வளியுமாட
இங்கிதம்சேர் புரினூலும் இசைந்தே யாட
கொஞ்சுதமிழ்க் கருணையம் பதியின் தேவன்
குஞ்சரனாம் மூத்தவிநா யகனும் வந்தான்

## 5. தந்திமுகத்தேவன் வந்தானடி

**இராகம்: காபி** **தாளம்: ஆதி**

### பல்லவி

தொந்தி குலுங்கிடத் தும்பிக்கை ஆடிடத்
தந்தி முகத்தேவன் வந்தானடி

### அநுபல்லவி

செந்தமிழ் ஈழத்தின் செழுங்கருணையம்பதி
கந்தனின் மூத்தவி நாயகன் அருள்தர

### சரணம்

கல்வி செல்வம் வீரம் கணபதி தந்தருள்வான்
நல்விநாயகனவன் நல்லதெல்லாம் தருவான்
அல்லல் அகற்றிடுவான் ஆனைமுகன் கணேசன்
தொல்லைகள் நீக்குவான் துணையருள் புரிகுவன்

ஆனைமுகனே உந்தன் அருள்முகம் கண்டிட
ஆவலாய்த் துடிக்கும்எம் அகநிலையறியாயோ?
மோனைத் தமிழழகா மூஷிகவாகனனே
முத்தமிழ் கொழித்திடும் சித்தியூர் கருணையிலே

இராகம் – யமன்கல்யாணி

விருத்தம்

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகும்
நீரருவி விழி கள்சொரியும்
பஞ்சக் கரனின் பதம் நினைக்கும்
பாதார விந்தம் நெஞ்சிருத்தும்
தஞ்சம் எனமூத்த விநாயகனின்
தாளிணைமலர் ஜீவன் பூஜைசெய்யும்
கொஞ்சுதமிழ் யாசக கருணையிலே
குதூகலிப்பான் மூத்த விநாயகனும்.

## 6. தமிழிசை பாடிட உருகுவான் கணபதி

**இராகம்: யமன்கல்யாணி** **தாளம்: ஆதி**

பல்லவி

தமிழிசை பாடிட உருகுவான் கணபதி
தாள் மலர் தந்து நிதம் ஆளுவான் குணநிதி

அநுபல்லவி

குமிழ்சிரிப்பும் தவழக்
குண்டலம் இரண்டாட
குலுங்கும் மலர்ச் சோலை
கமழ் கருணைப்பதியில்

சரணம்

பிரணவ ஓங்காரன் பிரியமாய்த் தமிழ்பாட
வரமருள்வான் மூத்த விநாயகன் மாதங்கன்
சரவணபவன் போற்றும் அரனவனின் மைந்தன்
கருணைப்பதிவாசன் கஜமாமுகன் கணேசன்

ஆயிரம் கல்தொலைவில் ஆத்மா இருந்துகொண்டு
ஆனைமுகன் உன்னைக்காண ஆவி துடிக்குதையா
சேயெமக் கருளாயோ செம்முகம் காட்டாயோ?
சோலைக் கருணையில் உன் சந்நிதி காண்போமோ?

## 7. முருகன் சோதரா மூத்த விநாயகா!

இராகம்: பெஹாக் தாளம்: ஆதி

பல்லவி

கருணைக்கடலே கருணை உருவே
கருணையம்பதிக் கணேசா சரணம்

அநுபல்லவி

அருளை அள்ளி அளிக்கும் பூரணன்
பெருமான் மூத்தவி நாயக சரணம்

சரணம்

உருகி உருகி உனைப்பா டிடுவேன்
வருவாய் அருள்வாய் வாரணப் பொருளே
முருகன் சோதரா மூத்தவிநாயகா
தருணம் இதுவே தருவாய் அருளே

அவ்வைக்கு முத்தி அருளிய தேவா
ஆனைமுகனே ஓங் காரப் பொருளே
செவ்விய செந்தமிழ்க் கருணையம்பதி
சீர்த்தலம் கொண்டிடும் மூத்தவி நாயகா

இராகம் – சங்கராபரணம்

விருத்தம்

பஞ்சக்கரத்தனை குஞ்சர முகத்தனை
மஞ்சு தவழ்நிலா அனையகொம்பனை
பிஞ்ஞகன்மைந்தனை மெஞ்ஞானத்தளிரை
நெஞ்சினில் வைத்தே நிழல் துதிப்பேன்.

## 8. வேழமுகனே ஆனையா

இராகம்: சங்கராபரணம் தாளம்: ரூபகம்

பல்லவி

வேழமுகனே ஆனையா!
வேளைஇது வே தானையா! ஐயா!

அநுபல்லவி

ஈழக்கருணை யம்பதித்தலத்தில்
கோயில் கொண்ட மூத்தவி நாயகா

சரணம்

நாளும் பொழுதும் நாடி உனது
பாதமலரைப் பாடுவேனையா!
சூழும் மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்
சோபனஞ்சேரும் மூத்தவி நாயகா

திக்கெவருமில்லைத் தீனதயாபரா
இக்கணம் வந்தருள் இறைஞ்சிடுவார் ஐயா!
விக்கின விநாயகா வேலவன் சோதரர்
முக்கண்ணனின் மைந்தா மூத்த விநாயகா

## 9. மங்களம் அருள்வாய் தும்பிமாமுகனே!

இராகம்: சண்முகப்பிரிய தாளம்: ஆதி

பல்லவி

மங்களம் அருள்வாய் தும்பிமாமுகனே!
சங்கரன் மகனே ஐங்கரனே அபயம்

அநுபல்லவி

பங்கஜப் பதமன்றிப் பாரில்துணையுமுண்டோ?
தங்கத்தமிழ் ஈழத் தலக் கருணைத் தேவா

சரணம்

விக்கினம் தீர்க்கும் மூத்த விநாயகனே அருள்
தக்கதுணை வருவாய்தந்தி முகத்தவனே
திக்குவேறில்லை ஐயா! தீன தயா பரா!
பக்கமமர்ந்தே எமைப் பாலித்திடுவாய் கணேசா

முத்தமிழ்க் கருணைய்யின் மூத்தவி நாயகா
இத்தரை மீதிலுன் இணையடி துணையே
சக்தியின் புதல்வா சரணம் முதல்வா
பக்தியுடன்பாடிப் பாதம் பணிந்தேனே.

இராகம் – ஹம்ஸாநந்தி

விருத்தம்

நொந்திருக்கும் எமதுள்ளம்
நீயு மறியாயோ?
தந்தி முகா தாளிணைகள்
தஞ்சமென க்தறுகிறோம்.
வந்தனைகள் புரிந்துன்னை
வாயாரப் பாடுகிறோம்
சுந்தர கருணை மூத்த
விநாயகனே பாராயோ?

## 10. இன்னும் இரக்கம் இல்லையோ ஐயா!

**இராகம் ஹம்ஸாநந்தி** **தாளம்: ஆதி**

பல்லவி

இன்னும் இரக்கம் இல்லையோ ஐயா!
மன்னும் கருணைவளரும் மூத்த
விநாயகனேஉனக் கெங்கள்மீதில்

அநுபல்லவி

மின்னும் அறுகும் ஆத்திசூடி
மிளிரும் மூத்த விநாயகா உனக்கு

சரணம்

பதமே கதியென் றடியர் கதறும்
பாட்டொலி உனக்கு கேட்கவில்லையா?
நிதமுன் சன்நிதி வாசலில் வந்து
நிமலா சரணமென் றுன்னடி பணிந்தோம்.

சக்தி விநாயகர் துணை

# இங்கிலாந்து விம்பிள்டன் தேம்ஸ்நதி ஸ்ரீ சக்தி விநாயகா அந்தாதிக் கீர்த்தனைகள்

## 1) லண்டன் நகர் அமரும் லம்போதரா

**இராகம் - அமிர்தவர்ஷணி** **தாளம் - ஆதி**

பல்லவி

லண்டன் நகர் அமரும் லம்போதரா - அருள்வாய்
வண்டமிழ் பாடிப்போற்ற வரமருள்வாய் கணேசா

அனுபல்லவி

பண்டொரு நாள் கொம்பொடித்துப் பாரதம் எழுதிய
தண்டமிழ்ப் புலவனானே தந்தி முகத்தவனே

சரணம்

தேம்ஸ் நதி தீரத்திலே திருத்தல விம்பிள்டனில்
ஓம் எனும் பிரணவ ஓங்காரர் வீற்றிருப்பாய்
சாம்பசிவன் மைந்தா சக்தி விநாயகனே
நாம் பாடித் துதித்திட நல்லருள் தந்தருள்

## 2) தந்தருள்வாய் அருள் தந்திமுகா

**இராகம் - ஹம்ஸத்வனி** **தாளம் - ஆதி**

பல்லவி

தந்தருள் தண்டமிழ் தந்திமுகனே - லண்டன்
வந்தமர்ந்தே விம்பிள்டனில் வரந்தரும் கணபதியே

அனுபல்லவி

செந்தமிழ்ப் பண்புடன் செழுந்தமிழ்க் கலையெலாம்
புந்திமகிழ்ந்திடவே படைத்துத் துதித்திடவே

சரணம்

வண்ணத் தமிழில் அவ்வை வடிவுற அகவல்பா
எண்ணம் வைத்தே உன்னை ஏத்திப் புகழ்ந்து பாட
பண்ணமுதம் கேட்டு பரிந்தருள் தந்த
அண்ணலே தேம்ஸ் நதிக்கரை ஆனைமுகனே அபயம்.

## 3) அபயம் தந்தருள் சக்தி விநாயகனே!

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

பல்லவி

அபயம் தந்தருள் சக்தி விநாயகனே - உந்தன்
உபயபதம் நினைந்து உளமாரவே பணிந்தேன்

அனுபல்லவி

தபஜெபம் புரிந்துந்தன் தாளிணை கதியென
நவ நவ மாகப் பாடல் நயந்து தமிழ் தந்தேன்

சரணம்

தேனருள் சுரந்திடும் தேம்ஸ் நதிக்கரையிலே
ஞானந்தவழும் லண்டன் வாழ் பிள்டன் நகரிலே
மோனமாய் அமர்ந்தருள் மோகனனே கணேசா
கானம் பாடித் தொழச் சக்தி கணபதி துணை நீயே.

## 4) நீயே கதிசக்தி விநாயகனே

**இராகம் - ஹம்ஸாநந்தி** **தாளம்: ஆதி**

பல்லவி

நீயே கதிசக்தி விநாயகனே - அருள்
தாயான தத்துவனே மூலா விம்பிள்டன் வாழும்

அனுபல்லவி

ஆயகலையனைத்தும் அருளும் ஆனைமுகனே
பாயும் லண்டன் தேம்ஸ் நதியின் பாங்கிலுறைபவனே

சரணம்

உந்திருப் பதமலர் உறுதுணை என நிதம்
வந்துந்தன் திருக்கோயில் வாயில் சரணடைந்தேன்
தொந்தி வயிற்றழகா துதிக்கையனே அருள்
செந்தமிழ் பாடிஉன்னைச் சேவிக்கும் நல்வரந்தா.

## 5) வரந்தாராய் வாரணனே

**இராகம் - ஹிந்தோளம்** **தாளம் - ஆதி**

பல்லவி

வரந்தாராய் வாரணனே - விம்பிள்டனில்
நிரந்தரக் கோயில் கொண்ட சக்தி விநாயகனே

அனுபல்லவி

கரந்தனில் பாசாங்குசப் படையேந்தும் ஐங்கரனே
இகந்தனில் லண்டன் நகர் இலங்கும் தேம்ஸ்கரையிலே

சரணம்

அவ்வையின் அகவலை அகங்குளிரப் பாட
செவ்வடி மலர் தர செழுங்கோயில் அமர்ந்தனை
திவ்ய குஞ்சரனே துதிக்கையனே பரனே
அவ்விதம் தமிழ் பாட ஆனைமுகனே என்றும்

## 6) என்றுமுன் எண்ணமன்றி

**இராகம் - காபி** **தாளம் - ஆதி**

பல்லவி

என்றுமுன் எண்ணமன்றி எதுவுமுண்டோ கணேசா
நன்று லண்டன் நகரினில் நாடி வந்தமர்ந்தவனே

அனுபல்லவி

அன்று அரக்கர் குல அகந்தை தனை அழித்தாய்
வென்று வாகை சூடினாய் வேழமுகத்தவனே

சரணம்

செந்தமிழ் பாடலுக்குச் செவிமடுத்தே மாந்தி
தந்த தமிழ்ப் புலமைத் தத்துவம் நயந்தனை
வந்தணைந்தே விம்பிள்டன் வளமார் தேம்ஸ் நதிக்கரை
சுந்தரக் கோயில் கொண்ட சக்தி **விநாயகனே.**

## 7) விநாயகனே வெவ்வினை தீர்ப்பான்

**இராகம் - கல்யாணவசந்தம்** **தாளம் - ஆதி**

பல்லவி

விநாயகனே வெவ்வினை தீர்ப்பான் - ஓங்காரன்
அநாதி சக்தி அவனே ஆனந்தம் தருவான்

அநுபல்லவி

அநாதரக்ஷகள் அவன் அடியார்க் கெளியன் பரன்
சுநாத விநோதன் சிவ சக்திக் கணபதியாம்

சரணம்

அன்புருவானவன் அழகு பொலிந்த ரூபன்
இன்புறவிம்பிள்டன் இலண்டனில் உறைபவன்
துன்புறுவார் துயர் துடைத்திடும் துதிக்கையன்
என்புருகச் செந்தமிழ் ஏத்திப் புகழ்போற்ற.

## 8) போற்றித் துதிப்பாய் மனமே

**இராகம் - திலங்** **தாளம் - ஆதி**

பல்லவி

போற்றித் துதிப்பாய் மனமே - பூரணனை
நாற்றிசையும் போற்றும் லண்டன் நதி
ஆற்றுத்தேம்ஸ் விம்பிள்டன் நீபோய்.

அநுபல்லவி

சாற்றி அவன் புகழைச் சந்ததம் நீ பாடு
ஏற்றி நீ பக்தியுடன் ஏரம்பன் கழல் நாடு

சரணம்

ஐங்கரன் ஓங்காரன் பொங்கரவம் சூடும்
சங்கரன் தன்சுதன் சாம்பவியின் மைந்தன்
மங்கள லாவண்யன் மாதங்கன் காருண்யன்
பங்கஜயப் பதம் அருள் பதி சக்திவிக்னேஸ்வரன்.

## 9) விக்னேஸ்வரன் துணை வருவான்

**இராகம் - ஷண்முகப்ரிய** **தாளம் - ஆதி**

பல்லவி

விக்னேஸ்வரனே துணைவருவான் - லண்டன்
விம்பிள்டன் கோயிலில் வாழும் சக்தி விநாயகனாம்

அநுபல்லவி

எக்காரியங்கள் வாழ்வினில் என்றும் தொடங்கும்போது
மிக்காவலோடு நீ என்றும் பிள்ளையார் சுழியைபோடு

சரணம்

சக்தி விநாயகனைச் சந்ததம் நீ தொழுவாய்
எக்காரியமும் செய்யின் இஷ்டசித்தி தந்தருள்வான்
நித்தியம் கணபதி நிழலை நீ பணிவாய்
சத்தியரூபனாம் சசிவர்ணன் அருள் தருவான்.

## 10) தருவான் அருளைத் துதிக்கரத்தான்

**இராகம் - பீம்பிளாஸ்** பல்லவி **தாளம் - ஆதி**

தருவான் அருளைத் துதிக்கரத்தான் - லண்டன்
நதியான தேம்ஸ் கரையில் நாடி விம்பிள்டன் கணேசன்

அனுபல்லவி

பெருவாழ்வு தரும் அந்தப் பேழை வயிற்றழகன்
அருமா மறைகள் போற்றும் ஆனந்தக் கணபதி

சரணம்

அன்னை பிதாவுமே அகிலம் என்றுணர்த்தி
வன்ன மாங்கனி பெற்று வாரணன் பூரணன்
இன்னல் எல்லாம் தீர்ப்பான் இன்பமன்றித் தருவான்
கன்னல் விருப்புடையான் கவன் சக்திவிநாயகன்.

***

# புன்னாலைக் கட்டுவன் ஆயாக்கடவைச் சித்திவிநாயகர் கீர்த்தனைகள்

## 1) ஆயாக்கடவை ஐங்கரனே அருள்வாய்

இராகம் - கம்பீரநாட்டை தாளம் - ஆதி

பல்லவி

ஆயாக் கடவை ஐங்கரனே - அருள்வாய்
ஓயாதுன் புகழ்நாமம் ஓதியே பாடஅருள்

அனுபல்லவி

தாயான தயாபரா தந்தி முகத்தழகா
சேயேனுன் பாதமலர் செந்தமிழிற் பாடஅருள்

சரணம்

மாயா விசாரங்கள் தோயாமற் புவியினில்
தூயோனே துதிக்கையா துணைசெய் தருள்கணேசா
காயாம்பூ மேனிவண்ணன் கண்ணன் மருமகனே
நீயே வரம் அருள்வாய் நிர்மலா புன்னைநகர்.

## 2) புன்னைநகர் வளரும் புனிதன்

இராகம் - கரகரப்பிரியா தாளம் - ஆதி

பல்லவி

புன்னை நகர்வளரும் புனிதா - என்றும்
உன்னையன்றி வேறு உலகில் துணையுமுண்டோ?

அனுபல்லவி

வண்ண மருப்பழகா வாரணத் தந்திமுகா
என்னைக்கண் பாராயோ எரம்பனே வாராயோ

சரணம்

மோனைத் தமிழ்அகவல் மூதாட்டி அவ்வைநல்க
ஆனை முகனே அன்பாய் அருந்தினாய் தீந்தமிழை
பானை வயிற்றழகா பாரதக் கவியழகா
தேனைப் பொழியும் மலர்ச் சோலை வளங்கள் நிறை.

## 3) ஞானக் கணபதி

**இராகம் - ஆனந்தபைரவி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஞானக் கணபதியின் மோனத் திருவடியைக்
கானம் பாடித் தொழுவாய் - புன்னைவளரும்

அனுபல்லவி

கானக் குறத்தி தன்னைக் கந்தன் வதுவை செய்ய
தானுதவிய தொந்தித் தந்தி முகனேசிவ

சரணம்

கரமலர் தூக்கி என்னைக் காத்திடுவாய் கணேசா
சிரமதை நானுமுந்தன் சேவடியில் வைக்க அருள்
அரனவனின் புதல்வா அரிகேசவன் மருகா
சரவணனின் சோதரா சாரும் ஆயாக்கடவை

## 4) சாருமதி மைந்தன்

**இராகம் - சாருமதி** **தாளம் - ஆதி**

பல்லவி

சாருமதி மைந்தனே - சற்குணனே
சாம்பசிவன் புதல்வனே சரணம்

அனுபல்லவி

மேருமலை மீது மேவும் மருப்பொசித்து
பாருலகில் எழுதிப் பாரதம் தந்ததேவா

சரணம்

ஐந்து கரனேசிவ சுந்தரி யாள் மகனே
செந்திரு வடிபாடிச் சேவிக்க நீயருள்
மந்திர ஓங்கார மாமறை ரூபனே
புந்தி மகிழ்ந்தமரும் புன்னைநகர் வாசனே.

## 5) கண் பார்த்தருள்வாய் கணபதியே

இராகம் - சுபபந்தவராளி　　　　தாளம் - ஆதி

பல்லவி

கண்பார்த் தருள்வாய் ஐயா - கணபதியே
பண்பாடி உன்னருள் பதம்பாடி நான்துதிக்க

அனுபல்லவி

விண்பாடி ஏத்திடும் விநாயகனே புன்னைத்
தண்ணாயாக் கடவையில் மண்ணோர் புகழுந்தேவா

சரணம்

வாரணத் தண்முகனே வரமருள் கணபதியே
காரண மானமூலா தாரக் குணபதியே
பூரண மெய்ஞ்ஞானம் பொலிந்திடும் தயாநிதியே
தாரணி தனில் உந்தன் தண்மலர்ப் பதம் கதியே.

## 6) கட்டழகுக் காட்சி

இராகம் - தேஷ்　　　　தாளம் - ஆதி

பல்லவி

பட்டுப்பீ தாம்பரத்திலே பஞ்சகச்சகம் கட்டியுந்தன்
கட்டழகுக் காட்சியைக் காணவருள் கணபதியே

அனுபல்லவி

பொட்டிலங்கும் நெற்றியிலே புண்ணியவெண் ணீறிலங்க
கட்டிச் சந்தனம்புனுகும் கரம் தொந்தி யிற்கமழ

சரணம்

பொன்னின்முடி துலங்கிட பூமாலை மார்பில் இலங்க
மன்னிடுமோ தகம்தும்பி மாமுகக் கரத்திலேந்தி
புன்னை ஆயாக் கடவையில் பூரணமாய் அமர்ந்தருள்
என்னையனே ஏரம்பனே எழிலாய் அலங்கரித்து.

## 7) ஆறுமுகன் சோதரா

**இராகம் - அமிர்தவர்ஷணி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஆறுமுகன் சோதரா - ஆறுமுகா
தேறுதல் மொழிகள் சொல்லி தேற்றுதலுன் பாரமையா

அனுபல்லவி

ஏறுமூ ஷிகத்தில்ஏறி எழிலான காட்சிதந்து
ஆறுதல் அருள்வாய்புன்னை ஆயாக்கடவை ஐங்கரா

சரணம்

அல்லும் பகலுமுந்தன் அடியிணைத் தாமரைகள்
சொல்லும் பொருள்நயமும் சோபிக்கப் பாட அருள்
வெல்லும் அங்குசப்படை விளங்கிடும் பாசமேந்தி
கொல்லும் வினையகற்றி நல்லாசி தந்தருள்வாய்.

## 8) துதிக்கையனே துணை

**இராகம் - பாகேஸ்ரீ** **தாளம் - ஆதி**

பல்லவி

உருக்கும் மனத்தில் என்றும் இருக்கும் விநாயகனே
கருக்கும் வினையகற்றிக் காத்தருள் ஐங்கரனே

அனுபல்லவி

பெருக்கும் அருள்பொலியும் பெருமானே முக்கனியின்
தருக்கன் மலியும் புன்னைத் தல ஆயாக் கடவையிலே

சரணம்

துதிக்கை யானேஉன்னைத் துணைஎனவே நம்பி
துதிக்கும்என் வினைதீர்த்துத் தூய அருள்புரிவாய்
கதிக்கு உன்னையல்லால் காப்பவர் யாருமில்லை
நதிக்குளிர் மதிச்சடை நாயகனின் புதல்வா.

## 9) ஏழிசை பாட அருள்

இராகம் - கல்யாணி

தாளம் - ஆதி

பல்லவி

ஏழிசை பாடஅருள் ஏரம்பனே - உந்தன்
தாளிணைத் தாமரைகள் தரணியி லேதுதித்து

அனுபல்லவி

மேழிசூ ழும்கழனி மேவும் புன்னைநகர்
வாழிய வேகணேசா வாரணத் தண்முகனே

சரணம்

செந்தமிழ் இனித்திடச் சேவடி பாடியே
அந்தமில் லாஅருளை அள்ளிநான் பருகிடஒ

தந்திடு வாய்வரம் தந்தி முகத்தோனே
சிந்தனைச் செல்வமும் சேர வருள்கணேசா.

## 10) சித்திரத் தேர் மீது வந்தான்

இராகம் - சுருட்டி

தாளம் - ஆதி

பல்லவி

சித்திரத் தேர்மீது வந்தான் - கணேசன்
அத்திமுகத் தையன் புன்னை ஆயாக் கடவையிலே

அனுபல்லவி

அத்திமுகக் கொம்புமாட அபய வரதமாட
சித்திபுத்தி தேவியாட பத்தருள்ளம் பரிந்தாட

சரணம்

அங்குசப் படையுமாட அழகுப் பாசமுமாட
பொங்கும் அருந் தும்பிமுகம் பொலிந்தபுன் னகையாட
திங்கள் தவழ் முடியாட தினகரன் மதியாட
எங்கும் அவன் அருள் ஆட எழிலாயாக் கடவையில்

# வண்ணை சாந்தையார் மடம் விநாயகர் கீர்த்தனைகள்

## 1) தலைவனின் தலைவனைத் தலையே நீ வணங்காய்

இராகம் - ஸம்ஸத்வனி தாளம் - ஆதி

பல்லவி

தலைவனின் தலைவனைத் தலையே நீ வணங்காய்
அலை மனம் அடக்கியே ஆறுதல் தந்தருள்வான்

அனுபல்லவி

கலைமகள் அலைமகள் மலைமகள் உறைந்திடும்
தலைநகர் யாழ்ப்பாண தண்பதி வண்ணையின்

சரணம்

ஐங்கரன் தாளிணை அனுதினமும் பாடு
சங்கடம் நீக்கியே சகலஜெயம் அருள்வான்
பொங்கரி வணிந்திடும் பூரணன் புதல்வனை
சங்கரி பாலனைச் சாந்தையார் மடந்தனில்

## 2) சாந்தையார் மடத்து வேந்தன்

இராகம் : ஷண்முகப்ரிய தாளம் - ஆதி

பல்லவி

சாந்தையார் மடந்தனில்
வேந்தன் விநாயகன்
சாந்தி தந்தருள் வான் ஐயன் - கணேசன்

அனுபல்லவி

ஏந்தல் புகழ்பாடி எழில் தமிழில் இசைக்க
பூந்தமிழ் தாமரையின்
பூம்பாதம் தானருள் வான்

சரணம்

விக்னங்களைத் தீர்க்கும்
விநாயகன் நாயகன்
திக்கனைத்தும் போற்றும்
தீன தயாபரன்
தக்க துணை தருவான்
தண்ணருளும் தருவான்
மிக்க புகழ் பொலிந்து
மிளிர் வண்ணைப் பதியிலே

## 3) மிளிர் சாந்தையார் மடத்தின் எழில்

**இராகம் - மோஹனம்** **தாளம் - ஆதி**

பல்லவி

மிளிர் சாந்தையார் மடத்தினில்
எழில் பெற அமர்ந்தருள்
களிறுக் கணேசனின் பொற்
கழலடி நீ தொழுவாய்

அனுபல்லவி

அளி பாடும் மலர்களும்
அவிழ் சோலை மலிந்திடும்
பொழில் நிறை வண்ணையில்
பொலிந்தமர்ந் தருள்பவன்

சரணம்

எந்தையே ஏரம்பனே
என்றும் துணை வருவாய்
முந்தி அவ்வை மகிழ
முத்தி கொடுத்த நாதா!
தந்தி முகத்தவனே
தண்ணருள் தருபவனே
விந்தை நகர் யாழில்
விளங்கு வண்ணைப் பதியில்

## 4) வண்ணைப் பதியமரும் வாரணன்

**இராகம் - கல்யாணிவஸந்தம்** **தாளம் - ஆதி**

பல்லவி

வண்ணைப் பதி அமரும் வாரணனே - சரணம்
வண்ணமருப் பழகா!
வளர் சாந்தையார் மடத்து

அனுபல்லவி

வெண்ணை உண்டிடும் மயன்
விரும்பும் மருமகனே!
எண்ண மெல்லாம் உன்பத
எழில் அருள் போற்றுதையா!

சரணம்

அங்குச பாச மேந்தும்
ஐங்கரனே அருள்வாய்
மங்கள விநாயகனே
மாதங்கனே துணையே
பொங்கும் துதிக்கையிலே
பூரணம் ஏந்திடுவாய்
எங்குறை தீர்ப்பவனே
ஏரம்பனே பணிந்தோம்

## 5) "ஏரம்பனைப் பணிவாய்"

**இராகம் - தோடி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஏரம்பனைப் பணிவாய் - நல்நெஞ்சே
தீரம் அருளும் ஞானத்
துதிக்கையனைத்து திப்பாய்

அனுபல்லவி

பாரம் அவனே எனப்
பக்குவமாய் அருள்வான்
ஆரம் புனையும் அய்யன்
ஆனைமுகன் காத்திடுவான்

சரணம்

சாந்தையார் மடந்தனில்
சாந்தியும் அருளுவான்
ஏந்தல் கணபதியை
ஏத்திப் பதம் பாடிடுவாய்
காந்த நயனன் அவன்
கணேஸ்வரன் காத்தருள்வான்
பூந்தமிழ் வண்ணையிலே
பொலிந்தருளும் பூரணன்

## 6) பொலிந்தருளும் பூரணன்

**இராகம் - மலயமாருதம்** **தாளம் - ஆதி**

பல்லவி

பொலிந்தருளும் பூரணன்
பொன்னடிகள் நாடு
கனிந்தருள் நல்கிடுவான்
கணபதி குணபதி

அனுபல்லவி

நலிந்திடும் வினைதீர்க்கும்
நாயகன் விநாயகன்
சொரிந்திடுவான் அருள்
சாந்தையார் மடந்தனில்

சரணம்

வள நிறையும் எழில்
வண்ணைப் பதியினிலே
இள நில வணிந்தவன்
என்றும் அருள் புரிவான்
உளமதில் சாந்தியும்
உயர்வும் அளித்திடுவான்
தெளிநறுந்தேன் பருப்பும்
தினமும் உவந்தளிப்பாய்

## 7) தினம் உவந்தருள் தரும் தீனதயாளன்

இராகம் - பீம்பிளாஸ் தாளம் - ஆதி

பல்லவி

தினம் உவந்தருள தரும்
தீன தயாளன்
மனம் உவந்தருள் துதிக்க
மலர்ந்து கதி தருவான்

அனுபல்லவி

கனவிலும் நனவிலும்
கணபதி புகழ் பாடு
அனவரதம் வண்ணைச்
சாந்தையார் மடம் நாடு.

சரணம்

எழில் நிறை கணபதி
ஏரம்பக் குணபதி
பொழில் நிறை வண்ணையில்
பொலிந்தருள் தயாநிதி
கழல் நமது சென்னியில்
காட்டும் கருணாநிதி
குழகன் மால் மருமகன்
குஞ்சரன் ஐங்கரன்

## 8) குஞ்சரன் ஐங்கரன்

இராகம் - மாண்டு　　　　　　　　　　　　　　　　　　தாளம் - ஆதி

பல்லவி

குஞ்சரன் ஐங்கரன்
கஞ்ச மலர்ப் பாதம்
தஞ்சமடைவாய் நெஞ்சே - நிதமே

அனுபல்லவி

மிஞ்சும் புகழ்தலமாய்
மிளிரும் சாந்தையார் மடம்
விஞ்சியுறைபவனாம்
விநாயகனாம் கணேசக்

சரணம்

பைந்தமிழிலே அவன்
　　பாதமலர் பாடு
உந்தன் வினைகள் நீக்கி
　　உயர்ந்த வாழ்வு தருவான்
சுந்தர வண்ணையிலே
　　சாந்தையார் மடத்திலே
வந்து உறைபவனாம்
　　வாரணத் தண்முகனாம்

## 9) வாரணத் தண்முகன்

இராகம் - ஹமீர்கல்யாணி　　　　　　　　　　　　　　தாளம் - ஆதி

பல்லவி

வாரணத் தண்முகன் வண்ணைப் பதிவாசன்
பூரணியின் புதல்வன் பொழிந்திடுவான் - அருள்

அநுபல்லவி

காரண மூலவன் காத்திடும் கணபதி
தோரணச் சாந்தையார் தொழும் மடம் உறைபதி

சரணம்

நிறையருள் புரிந்திடும்
நிமலன் விநாயகன்
குறைதீர்த்து அருள் தரும்
குஞ்சரனை வணங்காய்
இறைசிவனின் மகன்
இராஜேஸ்வரி புதல்வன்
பொறை தவழும் மூக்ஷிக
வாஹனன் மோஹனன்

## 10) வாஹன மோஹன மூஷிகம்

**இராகம் - திலங்** **தாளம் - ஆதி**

பல்லவி

வாஹன மோஹன மூஷிக மேறி வரும்
ஏக தந்த மூர்த்தி ஏரம்பன் நினக் கருள்வான்

அநுபல்லவி

நாக படத்தில் ஏறி நர்த்தனம் செய்த கண்ணன்
யோக மெனத் துதிக்கும் ஸ்ரீ மஹா கணபதி

சரணம்

சரித்திரம் போற்றிடும் சாந்தையார் மடவாசன்
உரித்தான பாசாங்குச உயர்படைக் கதிகாரன்
கரித்தந்தி முகத்தவன் கணநாதன் குணசீலன்
புரித்திரு வண்ணையின புகழ் விக்கினேஸ் வரன்

விநாயகர் கீர்த்தனைகள் முற்றிற்று.

உ
சிவமயம்

# வேலவர்
# அந்தாதிக் கீர்த்தனைகள்

இயற்றியவர்
''இயலிசைவாரிதி''
யாழ் - இணுவில்

## பிரம்மஸ்ரீ மா.த.ந. வீரமணிஐயர்
## அவர்கள்

# ஓமந்தை மருதோடைக் கந்தஸ்வாமி அந்தாதிக் கீர்த்தனைகள்.

(காப்பு)

## 1) ஓமந்தை வீரகத்தி விநாயகர் ஸ்துதி

**இராகம் - அமிர்தவர்ஷிணி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஓங்காரப் பிரணவனே - அருள்வாய்
பாங்கான ஓமந்தைக் கந்தன் தமிழ்பாட

அனுபல்லவி

பூங்காவனப் பதியாம் புகழ் பூத்திடும் மருதோடை
நீங்காத அருள் பொலிய நிறைந்த கந்தனை போற்ற

சரணம்

சூரன கந்தைதனைச் சுட்டெரித்த வேலன்
ஆரமெனத் தமிழ் அழகுமாலை புனை
ஓரமருதோடை ஓமந்தை வாழ்பவனே
வீரகத்தி விநாயகனே விரிமலர்த்தாள் சரணம்

## 2) சரணம் அருள்வாய் ஷண்முகா

**இராகம் - ஷண்முகப்பிரிய** **தாளம் - ஆதி**

பல்லவி

சரணம் அருள்வாய் ஷண்முகா - மருதோடை
மரகத மயில் வீரா கரதலவேலழகா

அனுபல்லவி

வரமருளி அன்பர்க்கு வாழ்வுதரும் - வேலா
சரவண பவகுஹா பரமதயாளா தேவா

சரணம்

நின்னடி நாடி வந்தே நீழல் தனைப் பணிந்தால்
அன்னவருக்கு வாழ்வில் ஆறுதல் தரும் சீல
கன்னல் கழனி சூழும் கவின்மிகும் ஓமந்தை
நன்னகர் மருதோடை நாளும் உறைபவனே

## 3) பவவினை தீர்த்திடும் பரன் நீயே

**இராகம் - ஸஹானா** **தாளம் - ஆதி**

பல்லவி

பவவினை தீர்த்திடும் பரன் நீயே - வேலா
தவநிறை தலமருதோடை அமரும் சீலா

அனுபல்லவி

நவமணி முடியாட நாரியர் புடைசூழ்
புவனியில் ஓமந்தைப் புண்ணியப்பதி வளரும்

சரணம்

முருகா குகா ஷண்முகா முகுந்தன் மருகா என
தருகித் தமிழ்பாட உவந்து வரம் அருள்வாய்
பெருகிக் கண்ணீர் சொரியப் பெருமானைச் சரணடைந்தால்
கருகிடும் தீவினைகள் கந்தஸ்வாமி அருள்வான்.

## 4) அருள் மருதோடை வடிவேலவன்

**இராகம் - கரகரப்பிரிய** **தாளம் - ஆதி**

பல்லவி

அருள்வான் மருதோடை வடிவேலவன் - குகன்
ஆனந்த மாமயிலில் ஞானம் தரவரும் சீலன்

அனுபல்லவி

திருவாழும் ஓமந்தை திகழும் மருதோடையில்
கருவாகிக் கோயில் கொண்ட கந்தஸ்வாமி எமக்கு

சரணம்

அவனுக்கு அருளிய ஆறுமுகன் அவன்
செவ்வடிவேல் ஏந்தும் சேந்தன் சிவகாந்தன்
திவ்விய குணாளனை திருமுருகனைப் பாடி
துய்ய திருவடிகள் துணையென பக்தருக்கு

## 5) பக்தருக்கருள் தரும் முத்துக்குமரன்

**இராகம் - காபி** **தாளம் - ஆதி**

பல்லவி

பக்தருக்கருள் தரும் முத்துக் குமரன் குகன்
வித்தகர் வாழ் ஓமந்தை விளங்கும் மருதோடை

அனுபல்லவி

சச்சி சிவபாலன் ஷண்முகநாதன் பரன்
முத்திதரும் வேலன் முண்டகப் பதம் போற்றும்

சரணம்

மருத மரச்சோலை மருதோடைத் தலத்திலே
திருவருள் சேர்க்கவே தேடிவந்தே அமர்ந்தான்
பெருவரம் நல்கியே பேணியே காப்பவன்
உருகுவார் நெஞ்சினில் உறைந்திடும் கந்தசாமி

## 6) கந்தசாமியைக் காணவேண்டுமென்று

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

பல்லவி

கந்தசாமியைக் காணவேண்டு மென்று
சிந்தை துடிக்குதடி - மருதோடை வாழ

அனுபல்லவி

கந்தமலர் சோலை சூழும் கவன் நகர் ஓமந்தை
வந்த வேலவனைக் கண்டே எந்தன் நிலை சொல்லி ஆறக்

சரணம்

கீரனவன் ஆற்றுப்படைக் கீதமழை சொரிந்திடவே
ஆர அள்ளித் தமிழ் மாந்தும் ஆறுமுக வேலனடி
ஊரதில் மிளிர் ஓமந்தை உறையும் திருமுருகன்
பாரதனில் பக்தருக்கு பாலித்தருள் சுரந்திருவான்

## 7) சுரந்திடுவான் அருள்

இராகம் - பாகேஶ்ரீ　　　　　　　　　　　　தாளம் - ஆதி

பல்லவி

சுரந்திடுவான் அருள் நிதந்தரும் முருகவேல்
கரந்தனில் வேல் ஏந்தும் கந்தஸ்வாமியடி

அனுபல்லவி

பரந்த மனத்தழகன் பார்வதி பாலகன்
வரந்தரும் மயிலவன் வணங்கும் அடியவர்க்கு

சரணம்

சத்துரு சங்கரா வேலவன் தானடி
நித்தம் அவன்பாத நீழலே கதியடி
பக்தியுடன் பாட நித்தம் அருள்வானடி
உத்தம மருதோடை ஓமந்தை கந்தனடி

## 8) கந்தனடி எந்தன்

இராகம் - திலங்　　　　　　　　　　　　தாளம் - ஆதி

பல்லவி

கந்தனடி எந்தன் சொந்தமடி - மருதோடை
வந்தமர்ந்தே எந்தன் சிந்தை கவர்ந்தானடி

அனுபல்லவி

எந்த நேரமும் அவன் சுந்தரரூபம் வந்தே
எந்தன் மனத்திருந்து இறும் பூதச் செய்யுதடி

சரணம்

கண்டநாள் முதலாய்க் காதல் கொண்டேனடி
அண்டரும் காணாத அழகனடி அவன்
வண்டமிழ் ஓமந்தை வளரும் மருதோடை
மண்டலத்தில் உறையும் மயில வாகனடி.

## 9) மயிலன் அவன் தானடி – மருதோடை

**இராகம் - ஹம்ஸாந்தி** **தாளம் - ஆதி**

பல்லவி

மயிலன் அவன் தானடி - மருதோடை
ஒயிலாக வந்தவன் அயிலேந்தும் ஆறுமுகன்

அனுபல்லவி

கயிலாயநாதனின் காந்தன் உமைபாலன்
வயல் சூழும் மருதோடை வாழும் வடிவேலன்

சரணம்

சரணமலர் தொழுவார் சங்கடம் தீர்த்துவைப்பான்
பரமதயாளன் குகன் பாலசுப்ரமண்யன்
கரதலவேல் ஏந்தும் கந்தஸ்வாமியவன்
புரமெனும் ஓமந்தை குருபரன்

## 10) குருபரனைப் பணிவாய் மனமே

**இராகம் - நாதநாமக்ரிய** **தாளம் - ஆதி**

பல்லவி

குருபரனைப் பணிவாய் மனமே - மருதோடை
திருவிளங்கும் கோயில் தினமும் வலம் வந்தே

அனுபல்லவி

உருகித் தமிழ் பாடி உமைபாலனைப் போற்றி
திருவடி துதித்திட திருவருள் புரிந்திடும்

சரணம்

ஷண்முகா குகா கந்தா சக்தி புதல்வா என்றே
பண்முறையாய் பாடி பக்தியுடன் துதிக்க
எண்ணிய யாவுமே எளிதில் உனக்கருள்வான்
புண்ணிய ஓமந்தை பூம்பதி வேலவன்.

# இலண்டன் முருகன் உச்சிவாயில் அந்தாதிக் கீர்த்தனைகள்

(விநாயகர் ஸ்துதி)

## 1) அருள் அமிர்தவர்ஷணி

இராகம் - அமிர்தவர்ஷணி தாளம் - ஆதி

பல்லவி

அருள் அமிர்தவர்ஷணி ஆனைமுகனே - இலண்டன்
திருமுருகனைப் பாடத்திருவருள் தாராய் தமிழ்

அனுபல்லவி

பொருள்சுவை சொற்சுவை பொலிந்திடத் தமிழ்ச்சுவை
தரும் முருக பக்தித் தமிழிசை பாடித் தொழ

சரணம்

அவ்வைத் தமிழை அன்று ஆனைமுகனே சுவைத்தாய்
கொவ்வை செவ்வாய் மலர்ந்து குமரன் தமிழ் ரஸித்தான்
செவ்வடிவே லேந்தி அவ்வைக்கு அருள் தந்தான்
கௌரி சிவசக்தி பாலனைப் போற்றிப் பாட

## 2) பாடிடப் பாடிடப் பாட்டினிக்கும்

இராகம் - ஷண்முகப்ரிய தாளம் - ஆதி

பல்லவி

பாடிடப் பாடிடப் பாட்டினிக்கும் - இலண்டன்
நாடி முருகன் பதம் பாடிடக் கண் பனிக்கும்

அனுபல்லவி

ஆடிடும் மாமயில் அமர்ந்த வடிவேலன்
ஓடிவந்தருள் செய்வான் உமை சிவசக்தி பாலன்

சரணம்

ஷண்முகப்ரியமான சரவணப் பூந்தடத்தில்
கண்மணி முருகனைக்கார்த்திகைப் பெண் வளர்த்தார்
வண்ணமாய்ச் சிவசக்தி வாரியரவணைத்தாள்
கண்ணயில் வேல் கொடுத்தாள் காட்சி தந்த கந்தனை

## 3) கந்தன் எந்தன் குழந்தையடி

**இராகம் - திலங்** **தாளம் - ஆதி**

பல்லவி

கந்தன் எந்தன் குழந்தையடி - லண்டன்
வந்தமர்ந்தே கோயில் கொண்டு
செந்தமிழின் பாடல் மாந்தும்

அனுபல்லவி

சிந்தை குளிர முருகன் சேவடிக் கிண்கிணி பூட்டி
பந்தமுடன் பட்டுடுத்தி பாலன்னம் கொடுப்பேன் ஊட்டி

சரணம்

வாரிவகி டெடுத்துப்பன் னீரில் அபிஷேகம் செய்து
நீறு பூசி நெற்றியிலே வித்திலகமு மிட்டு
வீறுச் சந்தனமும் பூசி வாகைக் கடம் பாரம் சூட்டி
போதிலங்கும் வேளையிலே புல்லரிப்பாள் சிவசக்தி.

## 4) சிவசக்தி மைந்தனைச் சிந்தனை

**இராகம் - நாட்டைக்குறிஞ்சி** **தாளம் - ஆதி**

பல்லவி

சிவசக்தி மைந்தனைச் சிந்தனை செய்வாய் - லண்டன்
தவசித்தியாக வந்த தங்கவேல் முருகன் குகன்.

அனுபல்லவி

உவர்ந்து உச்சிவாயில் உயர்கோயில் கொண்டருளும்

சரணம்

வண்ணத்தமிழ் பாட வரங்களும் தந்திடுவான்
எண்ணத்தில் இருந்தென்றும் எழில்நடம் ஆடிடுவான்
நண்ண முருகன் பதம் நாடுபவர்க் கருள்வான்
கண்ணயில் வேலேந்தும் கந்தனைக் கடம்பனை.

## 5) கடம்பனைப் பணி நெஞ்சே

**இராகம் - ஹம்ஸத்வனி** **தாளம் - ஆதி**

பல்லவி

கடம்பனை பணிநெஞ்சே - என்றும்
நடம்பயில் மயில்மிசை அமர்ந்தருள் செய்யும் லண்டன்

அனுபல்லவி

திடமனம் அருளுவான் தீந்தமிழ் மாந்துவான்
இடந்திகழ் உச்சிவாயில் இனியதலம் உறைவான்

சரணம்

அழகிய மாடம் தோன்றும் ஹம்ஸவத்வனி ஒலிக்கும்
தொழுதடியர் துதிக்கும் தூய தமிழ் தொனிக்கும்
எழிலியாள் சிவசக்தி சுதனவன் வேல்தோற்றும்
அழியாத அருள் தோற்றும் ஆனந்த வேல் முருகனை

## 6) முருகனைக் கண்டேனடி!

**இராகம் - கல்யாணவஸந்தம்** **தாளம் - ஆதி**

பல்லவி

முருகனைக் கண்டேனடி - லண்டன்
திருவளர் உச்சிவாயில் திகழு கோயில் வந்தமர்ந்த

அனுபல்லவி

உருகி உருகித் தமிழ் உளமாரப் பாடி நின்றேன்
பெருகிக் கண்ணீரால் பக்தி இருவிழி சொரிய இன்றே

சரணம்

தெய்வானை வள்ளியொடு தோகை மயிலின் மீது
கல்யாண வஸந்த மண்ட பத்தில் வீற்றிருந்தான்
மெய்ஞான வேல்கொடுத்த சிவசக்தியின் குமரன்
கையால் அபயம் காட்டிக் காட்சி தந்தானடி.

## 7) தந்தானடி அருளும் செந்தாமரை

இராகம் - கௌரி மனோஹரி தாளம் - ஆதி

பல்லவி

தந்தானடி அருளும் செந்தாமரை மலரில்
சந்தானமாக வந்த கந்தன் - லண்டனில்

அனுபல்லவி

முந்தானைக் கார்த்திகைப்பெண் இந்தா கந்தா பால் என
சிந்தாமல் தானும் மாந்திச் செந்தமிழ்த்தேன் எனக்குத்

சரணம்

கௌரி மனோஹரி கமலி சிவசக்தி
திவ்விய பாலகன் திருமுருகன் குமரன்
யௌவன வள்ளிதேவ யானையொடு கலாபமீதில்
மௌலியும் புனைந்து உச்சிவாயில் தலம் அமர்ந்து

## 8) அமர்ந்து அரனும் அன்று உவந்து

இராகம் - ஹரஹரப்ரியா தாளம் - ஆதி

பல்லவி

அமர்ந்து அரனும் அன்று உவந்து ஓங்காரம் கேட்க
தவழ்ந்து வந்துபதேசம் தான் புரிந்தாய் - முருகா

அனுபல்லவி

கமழ்ந்து மணம் பரப்பும் கடம்பமாலை அணிந்து
திகழ்ந்தது இலண்டன் உச்சிவாயில் மலைக்கந்தன் அன்று

சரணம்

திரிசூலக் கரஹரப்ரியமான முருகனே
அரிஅயன் மால் போற்று ஆனந்தக் குமரனே
தெரிதமிழை மாந்தும் கரிமுகன் சோதரனே
விரிமலர்ப் பதம் தாராய் சிவசக்தி பாலகனே

## 9) சிவசக்தி பாலகனைச்

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

பல்லவி

சிவசக்தி பாலகனைச் சிந்தனை செய்மனமே
ஜெயசித்தி தானருள்வான் ஜெகத்தில் லண்டன் முருகன்

அனுபல்லவி

நவசக்தி போற்றி செய்யும் நளின ஷண்முகநாதன்
தவநித்திலம் புரிந்து தாமரைப் பதம் பாடு

சரணம்

அமிழ்தான ஏழிசைத் தமிழ்பாட உருகுவான்
கமழ் மார்பில் கடம்பணி கந்தன்தமிழ் பருகுவான்
புகழ்மேவும் லண்டன் உச்சிப் புனிதவாயிற் கோயில்
திகழ் வேலன் திருநாமம் தெள்ளுதமிழ்பாடல் பாடி.

## 10) பாடி அழைத்தாய் எந்தன்

**இராகம் - தோடி** **தாளம் - ஆதி**

பல்லவி

பாடி அழைத்தாய் எந்தன்
பன்னிருகை முருகன்
ஓடி வருவானடி செந்தமிழில்

அனுபல்லவி

கூடிக்குலா பரிந்தோடி வருவன் கொள்ளை இன்பம் தருவான்
நாடி லண்டனில் வாழும் நாதனைப் பைந்தமிழில்

சரணம்

உச்சிவாயிற் கோயில் உவந்து நாடி வந்தே
மெச்சிச் சிவ சக்தி பாலன் மேதினியில் புகழ்பாடு
கச்சியப் பருக்கன்று காட்சிகொடுத்த கந்தன்
அச்சமெல்லாம் அகற்றி ஆனந்த வாழ்வு.

# கைதடி வடக்கு கயிற்றசிட்டிக் கந்தன் அந்தாதிக் கீர்த்தனைகள்

## 1) விநாயகர் ஸ்துதி

**இராகம் - ஹம்ஸத்வனி** **தாளம் - ஆதி**

பல்லவி

கந்தன் கழலடிகள் செந்தமிழில் பாடவருள்
சிந்துரவா ரணமுகா சிற்பர விநாயகனே

அனுபல்லவி

வந்தனை புரிந்து பக்தி வாரிச்சொரிந்து கந்தன்
பைந்தமிழ்ப் பாடல் பாடப் பதிக் கணபதி யருள்

சரணம்

சிந்தூரப் பொட்டழகன் சேவல் மயில் அழகன்
முந்து புகழைப் பாட மூஷிக வாகனா அருள்
தந்தி முகத்தவனே தமிழிசை பாடிட
வந்திருந்தருள் புரிவாய் வாரணனே சேந்தன்.

## 2) கயிற்ற சிட்டிக் கந்தனைப்

**இராகம் - ஷண்முகப்பிரியா** **தாளம் - ஆதி**

பல்லவி

சேந்தனை ஷண்முகனைச் செழுங் கயிற்ற சிட்டிக்
காந்தனைக் கந்தனைப் பணிமனமே - தினமே

அனுபல்லவி

பூந்தமிழிற் பாடிப் போற்ற புனிதன் அருள்புரிவான்
வேந்தன் வள்ளி குஞ்சரி சேர்ந்த மணாளனை

சரணம்

வேல் எடுத்தேந்தியே வீர சுப்ரம் மண்யன்
வெவ்வினை தீர்க்கவே விரைந்தோடி வருவான்
சேல்விழிக் குஞ்சரி வள்ளி தழுவும் ஐயன்
மால் மருகன் முருகன் மயில் வாகனன் குகன்.

## 3) குஹனைத் துதிப்பாய் மனமே

**இராகம் - பெஹாக்** **தாளம் - ரூபகம்**

பல்லவி

குஹனைத் துதிப்பாய் மனமே - வாழ்வில்
இகத்தில் கயிற்ற சிட்டி வாழ் கந்தனாம்

அனுபல்லவி

அகத்தில் அமைதி அருள்வான் கந்தன்
ஆனந்த பரவச மோனத்தில் திளைத்து

சரணம்

மனமும்குழைந்து உருகஉருக மலர்க்கண்ணீரும் பெருகப் பெருகத்
தினமும் கயிற்றசிட்டித்தலத்தில் திருக்கோயில் வலம்வந்தே பணிந்து
கனவும் மறவாக் கந்தஸ்வாமி கழல்கள் கதியென்றழு தே துதித்து
தனவில் குருபரனையே தொழவே நல்லருள் மாரிவாரிச் சொரிவான்.

## 4) சொரிவான் அருள் எங்கள்

**இராகம் - அமிர்தவர்ஷனி** **தாளம் - ஆதி**

பல்லவி

சொரிவான் அருள் எங்கள் சிவ சுப்பிரமணியன்
புரியான கைதடிக் கயிற்ற சிட்டிக் கந்தன்

அனுபல்லவி

அரிமாயனின் மருகன் ஆனந்தத் திருமுருகன்
விரிமா மயிலின் மிசை விளங்கும் கைதடிக் கந்தன்

சரணம்

அன்பொழுகப் பக்தி அனுதினமும் புரிந்தே
இன்புற மலர்தூவி என்றும் கந்தனைப் பணிவாய்
துன்புறுவார் துயர் துடைத்திடும் ஷண்முகன்
இன்ப மெல்லாம் அருள்வான் இனித்திடும் வாழ்வருள்வான்.

## 5) ஆழ் கயிற்றசிட்டி அழகுத்

**இராகம் - கரஹரப்ரிய** **தாளம் - ஆதி**

பல்லவி

வாழ்வருள்வான் வடிவேலவன் - கந்தன்
தாள் கதியெனச் சரணமடைபவர்க்கே

அனுபல்லவி

சூழ் பசுவை கொழிக்கும் சுந்தரக் கைதடியூர்
ஆழ் கயிற்ற சிட்டி அழகுத் தலக் கந்தன்

சரணம்

சரண மலரிணைகள் சந்ததமும் சரணடைவாய்
வரமருளியே கந்தன் வாழ்வருள்வான் ஐயன்
பரமசிவன் மைந்தன் பார்வதி பாலகன்
புரக் கயிற்ற சிட்டி புனிதக் கைதடிக் கந்தன்

## 6) சீர்த்தி நிறைந்த சேந்தன்

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி.**

பல்லவி

கந்தஸ் வாமியைக் காண வேண்டுமென்று
சிந்தை துடிக்குதடி - ஸகியே

அனுபல்லவி

செந்தமிழ்க் கைதடியூர் செழுங் கயிற்றசிட்டி
வந்தணைந்தே அமரும் வடிவழகன் எந்தன்

சரணம்

பார்க்கும் மிடமெல்லாம் பால் முகம் தோன்றுதடி
ஆர்க்கும் கழல் ஒலிக்க அவன் எண்ணம் சுழற்றுதடி
சீர்த்தி நிறைந்த சேந்தன் சிரிப்பொலி கேட்குதடி
கீர்த்தி மலிந்த கந்தன் கொஞ்சுதமிழ் ஒலிக்குதடி.

மத்தியமகாலம்

மந்த மாருதமும் வந்து வீசி எந்தன்
மையல் தனைப் பெருக்கி வீசுதடி
கந்தன் கந்தன் என்று கணமும் என் இதயம்
காதல் விரதத்தினால் துடிக்குதடி
எந்தன் மனம் மகிழ எழில் வேல் எடுத்துக் குகன்
என்னிடம் விரைந்தோடி வருவானோடி
கந்தம் கமழும் தலக் கயிற்ற சிட்டி வளர்
காந்தன் எந்தன் - காதல்தனை - அறிவானோடி.

## 7) ஓடி வந்தருள் தரும் ஓங்கார

**இராகம் - தோடி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஓடி வந்தருள்தரும் ஓங்கார மாமயிலன்
வேடிக்கை தனைப் பாரடி - ஸகியே

அனுபல்லவி

ஆடி அசையும் மயில் மீதில் அமர்ந்திருப்பான்
நாடி பக்தர் தொழவே மாமயில் தனைவிட்டு

சரணம்

பக்தியுடன் அவனை நித்தியமும் தொழுபவர்க்கு
சித்தியெல்லாம் அருளிச் சிறந்த வாழ்வு தருவான்
எற்றிசையும் புகழ்மணக்கும் எழில் தலக் கயிற்ற சிட்டி
முத்தன் முத்துக்குமாரன் பக்தருக்கு அருள் செய்ய.

## 8) தூய்யவடிவேல் தூக்கித் துயர்

இராகம் - நாட்டைக்குறிஞ்சி　　　　தாளம் - ஆதி

பல்லவி

செய்ய நகர் கைதடியில் செழுங் கயிற்றசிட்டி
ஐயன் கந்தஸ்வாமி பதம் அனுதினம் பூசை செய்வாய்

அனுபல்லவி

கையதிலே வேலை ஏந்தும் கந்தன் பக்தர் வினைகளெல்லாம்
துய்ய வடிவேலைத் தூக்கி துயர் தீர்த்தருள்வான் குகன்

சரணம்

வானளாவும் சோலைமலி வளநகர் கைதடியில்
மோனவடிவாகி நிற்பான் முத்துக் குமார ஸ்சுவாமி
ஞானசக்தி வேலவனை ஞாலமதில் துதிப்போர்க்கு
தேனமுத வாழ்வு தந்தே தெவிட்டா இன்பம் தருவான்.

## 9) கந்தம் கமழும் சோலைக்

இராகம் - காபி　　　　தாளம் - ஆதி

பல்லவி

தருவான் முருகேசன் தண்ணருளை எனக்கு
அருள்வானே ஆறுமுகன் அழகுக் கைதடி வாசன்

அனுபல்லவி

வருவானே வடிவேலன் வண்டமிழ் ஞானத்தின்
உருவான குமரேசன் உயர் கயிற்ற சிட்டியில்

சரணம்

கந்தனிடத்தில் பெரும் காந்தம் இருக்குதடி
வந்தெனக்குச் செந்தமிழ் வாரித் தருவானடி
கந்தம் கமழும் சோலைக் கயிற்ற சிட்டி வளமும்
கந்தஸ்சுவாமியை நானும் கனவிலும் மறவேனடி.

## 10) ஏனடி எனக்கு இந்த மோஷம்

**இராகம் - தேஷ்** **தாளம் - ஆதி**

பல்லவி

ஏனடி எனக்கு இந்த மோஷம் - கைதடி
ஞான வேலன் மீதில்பெருந்தாகம்

அனுபல்லவி

மோன வடி வேலழகும் மோகன மயிலழகும்
தேனமுதமான கந்தன் தெய்வமொழி இனிக்குதடி.

சரணம்

கட்டழகன் கந்தனையே காணமனம் துடிக்குதடி
வட்டமதி வதன மாறும் வந்து வந்து தோன்றுதடி
இட்ட முடன் கந்தன் வந்தே என்னை அணைத்திடானோ?
அட்டதிசை போற்றும் அருள் அழகுக் கந்தன் மீதில்

# மட்டுவில் அம்பலாந்துறை வேம்படி முருகன் கீர்த்தனைகள்

மருதடி விநாயகர் ஸ்துதி

1) **இராகம் - ஹம்ஸவத்னி** **தாளம் - ஆதி**

பல்லவி

திருவடி தொழுதேனையா - கணேசா
மருதடி வாழும் தேவா மதக்கரியே சரணம்

அனுபல்லவி

குருவடிவான ஞானக் குமரனை வேம்படியின்
முருகனைப் பாடித்தொழ முத்தமிழ் நீ அருள்வாய்

சரணம்

தஞ்சம் அடைந்தவர்க்கே அஞ்சல் அருள்பவனே
குஞ்சரனே உந்தன் குரைகழலே சரணம்
வெஞ்சமர் வேல் முருகன் வெற்றி கொள அருள் புரிந்தாய்
கொஞ்சு தமிழில் வேம்படிக் குமரனைப் பாட அருள்

2) **இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

பல்லவி

மட்டுவிலூர் வேம்படி மாதலம் தனில் வளர்
சித்திரவேலாயுதனே சேந்தனே அடைக்கலம்

அனுபல்லவி

எட்டுக்குடி வேலவனே ஏரம்பன் சோதரனே
பட்டதுயர் போதுமையா பாலித்தருள் தாருமையா

சரணம்

தேவா சிறை மீட்ட செல்வனே முருகா!
தெய்வப் பதமலரே துணையருள் குமரா
பூவில் உனையன்றி வேறு புகலுண்டோ குகனே
புவியில் எமைக்காப்பாய் சரவணபவனே.

3) **இராகம் - பாகேஸ்ரீ** **தாளம் - ஆதி**

பல்லவி

பூம்பதம் அருள்வாய் ஐயா - முருகா
வேம்படி வேலையா! வேறு துணை இல்லை ஐயா.

அநுபல்லவி

ஆம்பல் மலரும் வயல் அழகுறு மட்டுவிலூர்
தீம்பதித்தலம் வளரும் திருக்குமரையா உந்தன்

சரணம்

அருகில் வந்தே எம்மை ஆறுமுகனே காப்பாய்
உருகி உருகி என்றும் உன்பதம் நாம் தொழுவோம்
இரு கண்ணீல் நீர் சொரிய இணையடி வேண்டி நின்றோம்
திருவளர் மட்டுவிலூர் திகழ் வேம்படி முருகா.

4) **இராகம் - ரஞ்சினி** **தாளம் - ஆதி**

பல்லவி

குமரன்கை வேலிருக்கக் கோலமயில் இருக்க
அமர்சேவற் கொடியிருக்க அஞ்சாதே நீ மனமே

அநுபல்லவி

சமரினில் சூரனையே சங்கரித்த வேலன்
எமதிடர் நீக்கிடுவான் என்றென்றும் காத்திடுவான்

சரணம்

கழனி சூழும் வேம்படிக் கவின் பதி மட்டுவிலூர்
பழனி வேலவன் என்றும் பாலித்திடுவான் அருள்
அழகிய திருவடி ஆறுமுகன் தருவான்
ஆனந்த வாழ்வருள்வான் அவனியிலே வேம்படி.

5) இராகம் - கல்யாணவஸந்தம் தாளம் - ஆதி

பல்லவி

வஸந்த மண்டபத்திலே வேலன் வந்தான் - மங்கை
வள்ளி குஞ்சரிமாலை ஏந்தி வந்தார் - கல்யாண

அனுபல்லவி

இசைந்த மாங்கல்யம் மார்பில் அசைந்தாட வலம் வந்தார்
இலங்கு பதவிரலில் இணைந்தாள் மெட்டி முருகன்

சரணம்

மட்டுவிலூர் வேம்படியின் மாதலஅம் பலத்துறையில்
பட்டுப் பீதாம் பரம் கட்டிப் பாவையரோடு லாவந்தான்
எட்டுத்திசை போற்றிடவே எழிலருட் காட்சி தந்தான்
துஷ்ட நிக்கி ரஹம் செய்தே தூய வரைக்காக்கும் வேலன்.

6) இராகம் - பூபாளம் தாளம் - ஆதி

பல்லவி

காலைக் கதிரவன் கந்தனுன் பதத்தில்
மாலை சூட்டித் தொழுவான் மட்டுவிலூர் வேம்படியில்

அனுபல்லவி

சோலைக் குயிலினங்கள் சேவல் முருகா எனும்
பாலைப் பொழியும் பசு பாலிப்பாய் குமரா எனும்

சரணம்

பச்சை வயல்களெல்லாம் பசுமைத் தோகை விரிக்கும்
பார்த்த மயில்கள் தோகை சேர்த்தசைத்தே ஆடும்
இச்சை மிகும் வேம்படியில் இறைஞ்சிடும் பக்தர் குழாம்
அச்சமேதும் இல்லையென அபயம் குகன் தருவான்.

7) **இராகம் - ஹம்ஸாநந்தி** **தாளம் - ஆதி**

பல்லவி

கலாபமயில் மீது உலாவி வந்தானடி
குலாவும் வள்ளி குஞ்சரி கொஞ்சிடும் வேலவன்

அனுபல்லவி

நிலாப் பிறையணிந்திடும் நீலகண்டன் மைந்தன்
பலாமா வாழை மலியும் பதிமட்டு விலூரினில்

சரணம்

செம்பவள வாய் மலர்ந்து சேந்தன் சிரித்தானடி
நம்பவப் பிணியறுக்க நாயகன் வந்தானடி
அம்பலந் துறையில் மேவும் ஆறுமுகன் மணியொலிக்கத்
தம்பதும மலர்ப்பதம் தந்தானடி வேலவன்

8) **இராகம் - தனஸ்ரீ** **தாளம் - ரூபகம்**

பல்லவி

காந்தம் இழுக்குதடி - மட்டுவில்
வேம்படி முருகனின் ஆம்பலின் நயனக்

அனுபல்லவி

சேந்தன் உருக்குதடி - மனம்
சேவடி பாடியே காவடி ஆடிடக்

சரணம்

மங்கள வாழ்வு மயிலவன் தருவான்
மங்கையர் மார்பினில் மாங்கல்யம் தந்தருள்வான்
பொங்கிடும் சந்தான பாக்கியம் கொடுப்பான்
பொலிவுறும் அம்பலந் துறைத்தல வேலவன்

9) **இராகம் - மாயாமாளவகௌளை** **தாளம் - ஆதி**

பல்லவி

ஏரம்பன் சோதரனே - சரணம்
வேறெழில் வேம்படி
வேலவனே சரணம்

அனுபல்லவி

ஆரக் கடம்பணியும் ஆறுமுகா அபயம்
ஊரது மட்டுவில் வாழ் உயர் அம்பலந்துறையின்

சரணம்

ஞானப் பழம் நீயே ஞானமதில் எமக்கு
மோனப் பதம் தாராய் மோஹனனே குமரா
வானவர் தொழுதேத்தும் வடிவேலனே உன்னைக்
கானம் பாடித் தொழுதோம் கழலடி தாருமையா.

10) **இராகம் - ஸிந்துபைரவி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஸிந்துபைரவி தந்தான்
சக்திவேல்
கந்தனே வேம்படிக் கடம்பனே காத்தருள்

அனுபல்லவி

நொந்து உருகி உந்தன் நிழல் சரணடைந்தோம்
உந்தனை யன்றி வேறு உறுதுணை உண்டோ குகா.

சரணம்

அபயம் முருகா என்றே அலறுவதறியாயோ?
அடைக்கலமாக வந்தோம் ஆறுமுகா சரணம்
பவவினையறுத்திடும் சரணவ பவனே
பதிமட்டு விலூர் வளர் பால சுப்ரமண்யா.

# நீர்வேலி செல்லக்கதிர்காம ஸ்வாமி அந்தாதிக் கீர்த்தனைகள்

விநாயகர் ஸ்துதி

1) இராகம் - ஹம்ஸத்வனி தாளம் - ஆதி

பல்லவி

பரவிப் பாட அருள்வாய் - முருகன்
அரசகேசரி நீர்வை ஆனைமுகனே தமிழ்

அனுபல்லவி

கரதலம் பூரணமும் அபயவரதம் ஏந்தும்
கரிமுகனே உனது கழலடிகள் சரணம்

சரணம்

ஆறுமுகன் குகன் அருளை வேண்டியே நிதம்
வீறு கொண்டு செல்லக் கதிர்காமன் மாந்திட
கூறுதமிழ் மாலை குரைகழல் சூட்டிட
ஏறும் மயில் வாகன எழிற் செல்லக்கதிர்காமனை (பரவிப்)

2) இராகம் - கல்யாணி தாளம் - ஆதி

பல்லவி

செல்லக் கதிர்காமனின் சேவடி பாடு - முருகன்
அல்லல் அகற்றிடுவான் அம்புஜப் பதம் நாடு

அனுபல்லவி

வல்ல வினைக ளெல்லாம் வடிவேலன் தீர்த்திடுவான்
நல்லருளும் பொழிவான் நானிலத்தில் காத்திடுவான்

சரணம்

நீர் வைத்தலம் வளரும் நிமலன் கதிர்காமன்
பார்புகழும் பக்தர்க் கனுகூலன்
ஏர்மலி கழனியும் எழில் களிவளம் பொலி
கார்மலி நீர்வேல்கவின் தலம் அமர்ந்தருள் (செல்லக்)

3) **இராகம்: வசந்தா** **தாளம்: ஆதி**

பல்லவி

அமர்ந்தருளி அபயம் உவந்தருள் மயில்வன்
கவர்ந்தானடி என் உளம் ஸகியே - நீர்வையிலே

அனுபல்லவி

தவழ்ந்திடும் சேவலின் தன்கொடி ஆடிட
கமழ்ந்திடும் மலர்மாலை கவினொழுகப் புனைந்தே

சரணம்

சுரந்திடும் கருணைபோல் சுனைநிறை நீர்வேலி
உறைந்திடும் குருபரன் உயர் செல்லக் கதிர்காமன்
வரதமும் ஏந்தியே வரந்தரும் அபயமும்
நிரந்தரம் அருள்தா நீர்வேலிப் பதியிலே (அமர்ந்தருளி)

4) **இராகம் - திலங்** **தாளம் - ஆதி**

பல்லவி

நீர்வேலிப் பதியிலே நெஞ்சம் கவர்ந்த கள்வன்
சீர்மேவு வரந்தரும் செல்லக்கதிர்காமன்

அனுபல்லவி

பார்போற்றிடும் ஷண்முகன் பார்த்திருவான் என்முகம்
கூர்வேலெடுத்தேந்தும் குமரன் ஆறுமுகன்

சரணம்

கந்தன் அவனிடத்தில் காந்தம் இருக்குதடி
எந்தன் மனம் மயங்கி இதயம் இழுக்குதடி
வந்தெனைப் பாரானோ வரங்களும் தாரானோ
விந்தை மயிலில் வந்தே வினைகளைத் தீரானோ (நீர்வேலி)

5) இராகம்: பாகேஸ்ரீ தாளம்: ஆதி

பல்லவி

தீராஓங்கார போதா சூராதி சூரா வீரா
தாராயோ நின்பதத் தாமரையே - கதிர்காமா

அனுபல்லவி

ஆராமமுதனைய ஆறுமுகத்தயா பரா
கூராயுதமாம் ஞான வேலாயுத ஸாகரா

சரணம்

வேதாகமங்கள் போற்றும் சீதானந்தக் குமரா
பாதாரவிந்த மலர் பரிந்தருளே நீதா
ஆதார ஞான மூலா ஆனந்தவள்ளி லோலா
நாவார தமிழ் பாட நாடினேன் நீர்வை வாசா (தீராஓங்)

6) இராகம் - கேதாரகௌளை தாளம் - ஆதி

பல்லவி

நீர்வை வாசனை நிமலியின் புதல்வனை
ஆர்வமுடன் பாடினேன் - அருள்பெறவே

அனுபல்லவி

சீர்மேவு தமிழ் மாந்தும் செல்லக்கதிர்காமன்
தார்மேவு தண்டமிழை மார்மீதில் புனைபவன்

சரணம்

நெந்தமிழ்ப் புலவரின் செழுந்நாவில் உறைபவன்
கந்தனாம் குகன் செல்லக் கதிர்காமன் உமைபாலா
பைந்தமிழ் ஔவைக்கு பழநாவல் தந்தவன்
சுந்தரச் செந்தமிழ் சுவையறிந் துண்டவன். (நீர்வை)

7) **இராகம் - பீம்பிளாஸ்** **தாளம் - ஆதி**

பல்லவி

சுவையறிந்துண்டு தமிழ் அருணகிரிப் புகழின்
இசையிலே மயங்கிய முருகனடி - இனிக்கும்

அனுபல்லவி

நவநவ சந்தமொடு நயம் பொலிபுகழினில்
தவமெனும் தமிழதைச் சரவணனும் மாந்த

சரணம்

வெல்லமென இனிக்கும் வண்டமிழ்த் திருப்புகழ்
கல்லும் கனிந்துருகும் கந்தனின் திருப்புகழ்
செல்லக் கதிர்காமன் சேவடி சூட்டும் தமிழ்
நெல்லுக் கழனி சூழும் நீர்வேலிக்கதிர்காமர் (சுவை)

8) **இராகம் - காபி** **தாளம் - ஆதி**

பல்லவி

நீர்வேலிக்கதிர்காமன் நிழல் துதிமனமே
பார்போற்றும் சரவணபவனெனும் குருபரன்

அனுபல்லவி

கூர்வேலெடுத் தேந்திக் கொடியரைக் கொன்றீரன்
மார்மீதில் கடம்பணி மயில்வன் சுகுமாரன்

சரணம்

வள்ளி தேவயானை சூழ வடிவேலும் ஏந்தியே
புள்ளிமயில் மீதில் புண்ணியவன் வீற்றிருப்பான்
அள்ளி அள்ளி அருளை அன்பருக்கே கொடுப்பான்
தெள்ளு தமிழ் மாந்தும் தீன தயாபரன்

9) **இராகம் - ஸிந்துபைரவி** **தாளம் - ஆதி**

பல்லவி

தீனதயாபரன் மோன மயிலழகன்
ஞானச் செல்லக்கதிர் காமனைப் பணிநெஞ்சே

அனுபல்லவி

வானவர் தொழுதேத்தும் வரதனாம் ஷண்முகன்
கூனல் பிறையணியும் கூத்தனின் அருஞ்சுதன்

சரணம்

தாமரைப் பதமலர் தாரணி தனில் கூடு
மாமயில் வாகனன் மகிழ்ந்தருள்வாள் பாடு
நாமமகிமை பெறும் நீர் வேலித் தலம் நாடு
கோமள வள்ளி காந்தன் குஞ்சரிநாதனை நாடு.

10) **இராகம் - ரஞ்ஜனி** **தாளம் - ஆதி**

பல்லவி

குஞ்சரி நாதனைத் தேடி நெஞ்சமகிழ்ந்தேன் நானடி
அஞ்சுகம் கொஞ்சுதலமாம் அழகுறு நீர்வையிலே

அனுபல்லவி

செஞ்சதங்கை கொஞ்சிடவே செல்லக்கதிர்காமன் உந்தன்
அஞ்சல் அஞ்சலென்றருளை அள்ளி அள்ளியே தந்தான்

சரணம்

செந்தமிழுக் குருகுபவன் செல்லக் கதிர்காமனவன்
பைந்தமிழின் பாட்டிசைக்க பரிந்தோடி வந்தான் குகன்
விந்தை மயிலை மறந்து வேலயில் தனை மறந்து
சிந்தை குளிர்ந்திடத் தமிழ் கந்தனவன் மாந்திநின்றான்.

# திருச்செந்தூர் முருகன் கீர்த்தனைகள்

## 1) தூண்டிகை விநாயகர் ஸ்துதி

**இராகம் - நாட்டை** **தாளம் - ஆதி**

பல்லவி

வேண்டினேன் வரமருள்வாய் - தேவா
தூண்டிகை விநாயகனே தும்பிமுகனே உன்னை

அனுபல்லவி

ஆண்டியாய் வேடம் பூண்ட ஆறுமுகன் சோதரா!
பாண்டிநாட்டில் திகழும் பதிதிருச்செந்தூர் வந்து

சரணம்

கொம்பின் எழுத்தாணி கொண்டெழுதிப்பாரதம்
அம்புவிக்கே தந்தாய் அழகு வாரணத் தேவா
தம்பிசுப்ரம்மண்யன் தாளிணை பாடிட
நம்பினேன் நல்லருள் நல்குவாய் நின்னையே.

## 2) செந்தூர் முருகன் புகழ்பாடு

**இராகம் - ஷண்முகப்ரியா** **தாளம் - ஆதி**

பல்லவி

செந்தூர் முருகன் புகழ்பாடு - மனமே
பந்தமகற்றும் குஹன் பாதத்திற்கேது ஈடு

அனுபல்லவி

செந்தாமரை மலர் சேரும் சரவணத்தில்
வந்தாறு முகமாகி வரமருளும் கந்தன்

சரணம்

ஓம் முருகா என ஒலித்துக் கடல் அலைகள்
நாமமகிமை பாடி நாதன் கழல்கள் நாடும்
நாமகள் பூமகளும் நாடிவந்தே உறையும்
பூமலர்ச் சோலைமலி புண்ணியப் பதித்திருச்

## 3) ஒருதரம் காணேனோ?

**இராகம் - ஸஹானா** **தாளம் - ஆதி**

பல்லவி

கருணைமுகன் காணத் தவிக்குது என்நெஞ்சம்
அருள்தனைத் தாராயோ ஆறுமுகனே உந்தன்

அனுபல்லவி

திருமலியும் சோலைத் திகழும் கலைபொலியும்
திருச்செந்தூர்ப்பதித் தமிழ்ச்சங்கத்தலைவனுன்

சரணம்

அருள் ஒழுகும் உனது ஆறுமுகங்களை நான்
ஒரு தரம் காணேனோ திருவருள் புரியாயோ?
பொருள் புரிந்துன்னைநான் போற்றித்தமிழிற் பாட
வருவாயே பால சுப்ரமணியனே செந்தூர் வந்து

## 4) மணிமணியான தமிழ் மலர் மாலை

**இராகம் - கல்யாணி** **தாளம் - ஆதி**

பல்லவி

மணி மணியானதமிழ் மலர்மாலை தொடுத்து நான்
அணி அணியாரம் சூட்ட ஆறுமுகனே அருள்

அனுபல்லவி

கணீர் கணீர் என அலைகள் கரையிலுன்புகழ்பாடிப்
பணிசெய்யும் திருச்செந்தூர்ப் பதிப்பாலசுப்ரமண்யா

சரணம்

அவ்வை அன்புடன் தந்த அழகுத் தமிழ் சுவைத்தே
கொவ்வைச் செய்வாயின் இதழ் குழியச்சிரித்து நின்றாய்
செவ்வேல் எடுத்து எந்தன் செந்தமிழ் கேட்டிடநீ
அவ்விதம் வருவாயோ அருள் நீயும் தருவாயோ?

## 5) உவந்து பாடிட அருள்

இராகம் - ரஞ்ஜனி தாளம் - ஆதி

பல்லவி

மனமுருகிப் பாடும் மாண்புநிறை தமிழில்
தினமும் துதிசெய்திடத் திருவருள் செய்குஹனே

அனுபல்லவி

வனமகளாம் வள்ளி வாலைக் குஞ்சரி லோலா
உனதிரு மலரடி உவந்து பாடிட அருள்

சரணம்

பார்வதி பாலகனே கூர்வடி வேலவனே
பாலசுப்ரம்மண்யா பதி திருச்செந்தூர் வளர்
சீலனே செந்தமிழே தீன தயாபரனே
கால காலன் மகனே கார்த்திகேயனே உன்னை

## 6) புண்ணியனே சரணம்

இராகம் - ஹரஹரப்பிரியா தாளம் - ஆதி

பல்லவி

வள்ளி குஞ்சரி சூழ வடிவேலுமேந்தி நீலப்
புள்ளி மயில் மேவும் புண்ணியனே சரணம்

அனுபல்லவி

தெள்ளுதமிழில் கானம் தேவனே பாட அருள்
அள்ளும் திருச்செந்தூரில் ஆனந்தமாய் அமர்ந்து

சரணம்

திருச்செந்தூர்த்திருத்தலம் தேடிவந்தே உன்னை
அருச்சனை பாடிநாளும் ஆலிங்கனம் செய்தே
திருப்பதம் பெறுவேனோ திருக்குமரனே உந்தன்
விருப்புடன் அருள்பெற்று திருப்பதம் பாடிட.

## 7) சிந்தை கவர்ந்தானடி

இராகம் - பெஹாக் தாளம் - ஆதி

பல்லவி

செந்தூர்ப் பதிமருவும் கந்தன் எந்தன்
சிந்தை கவர்ந்தானடி - ஸகியே

அனுபல்லவி

சிந்தும் அருள்வேலேந்திச் சேவற்கொடியும் ஏந்தி
விந்தை மயிலில் ஏறிவள்ளி குஞ்சரியோடு

### சரணம்

வெள்ளலை ஓடோடி விரைந்துவந்தே அருள்
வள்ளலைப் பாடியே வாழ்த்திப்பதம் துதிக்கும்
வள்ளை இசைக்கும் குயில் வரதனைப் பாடிக்கூவும்
கிள்ளை கொஞ்சிடும் நெஞ்சம் அள்ளிடும் பூம்பதிச்

## 8) குறுநகை பூத்திடும் திருமுகன்

**இராகம் - காபி** **தாளம் - ஆதி**

### பல்லவி

மரகத மயில்மீது வந்தான் - குஹன்
மருவிடவே பதித்திருவளர் செந்தூரில்

### அனுபல்லவி

உரகசயனன் மகிழ் உயர்மருகன் முருகன்
கரமதில் வேலேந்திக் கன்னியரிருவர்சூழ

### சரணம்

குறுநகை பூத்திடும் திருமுகம் காட்டியே
அறுமுகன் பேரின்பம் அள்ளி அள்ளித் தருவன்
உறுதுணையாய் எனை உலகினில் ஆட்கொள்வான்
முறுவல் தவழ்முருகன் முத்திதரவருவன்.

## 9) கூறிடுவாயோ? வள்ளி

இராகம் - பாகேஸ்ரீ  தாளம் - ஆதி

பல்லவி

கூறிடுவாயோ வள்ளி - செந்தில்
குமரன் உன்னிடம்வந்து குலவிமகிழும்போது

அனுபல்லவி

வேறுதுணை இல்லை வேல்முருகா என்றே
ஆறுமுகனைக் காண அன்பன் துடிப்பதைநீ

சரணம்

செந்தில் வடிவேலன் சுந்தரி சிவபாலன்
பந்தம் அகற்றியருள் பாலசுப்ரமண்யன்
உந்தனை அணைத்திடக் கந்தன் வரும்போது
எந்தன் நிலையைநீயும் எடுத்து மெல்லமெல்ல

## 10) அருள் தரும் குஹன்

இராகம் - தேஷ் தாளம் - ஆதி

பல்லவி

நெக்குருகிப்பாட நெஞ்சில்வந்தே உறையும்
அக்குருபரனடி அடைந்திடுவாய் மனமே

அனுபல்லவி

திக்கு எவரும் இல்லை தீன தயாளாஎன
அக்கணமே வந்து அருள் தரும் முருகனை

சரணம்

ஆழக்கடலருகே அழகுத்திருச்செந்தூரில்
சூழும் திரைஒலிக்கும் திருக்கோயில் வந்தமர்ந்து
வாழவைக்கும் தெய்வம் வடிவேலனின் இரு
தாளிணைமலரடி தமிழின் சுவைஇனிக்க.

## பிள்ளையார் வேலவர் கீர்த்தனைகள் முற்றிற்று.

சுபம்



